லியோ டால்ஸ்டாயின்

# துறவியின் சோதனை



[ செர்கியஸ் பாதிரியார் ]



பழனியப்பா பிரதர்ஸ்

MANI

# முன்னுரை

**செ**ன்ற நூற்றுண்டில், ரஷ்ய நாட்டில், ஒரே சமயத்தில் பல மேதைகள் தோன்றியிருந்தார்கள். அவர்கள் அனைவரும் உலகப் புகழ் பெற்றவர்கள். அவர்களிலே தலைசிறந்த கலைஞர் டால்ஸ்டாய்.

**லியோ டால்ஸ்டாய் பிரபு** (1828—1910) பலவகைத் திறமைகள் பெற்று விளங்கினர். அவர் பிரபுக்களின் வமிசத்தைச் சேர்ந்தவர், போரிலே படைகளுக்குத் தலைமை வகித்து நடத்திப் புகழ் பெற்றவர், கருத்து நிறைந்த அழகான பல நூல்களையும், கதைகளையும் எழுதிச் சிறந்த கலைஞராக விளங்கியவர். கலைஞர் என்ற முறையில், அவர் 'பூமியிலிருந்து வானம் வரை வளர்ந்து நின்ற கலைஞர்' என்று **லெனின்** அவரைப் புகழ்ந்திருக்கிறுர். அவர் உயர்ந்த சிந்தனையாளர், தத்துவஞானி, ஆழ்ந்த சமயப் பற்றுடையவர். நூல்களில் தாம் எழுதிய விஷயங்களின்படியே தாமும் வாழ்க்கை நடத்த வேண்டுமென்று விரும்பி, சொத்து, சுகங்களை யெல்லாம் துறந்து, பெருமுயற்சிகள் செய்து, தாமே உழுது பயிரிடவும் செருப்புத் தைக்கவும், குடியானவர் குழந்தைகளுக்குக் கல்வி போதிக்கவும் அவர் தொடங்கினர். இலக்கியத்திலே தாம் தொட்டதை யெல்லாம் பொன்னுக்கித் துலங்கச் செய்த அந்த அறிஞர், எந்தத் தொழிலையும் இழிவென்று கருதாமல், உட

லால் உழைத்தே மனிதன் உண்ணவேண்டுமென்பதைத் தாமே செய்து காட்டினர்.

வாழ்க்கை, சமூகம், வர்க்கவேற்றுமை, சமயம், ஒழுக்கம், கலை, அரசியல், பொருளாதாரம், கல்வி ஆகிய விஷயங்களைப் பற்றியெல்லாம் அவர் வாழ்நாள் முழுதும் ஆராய்ந்து, தாம் கண்ட முடிவுகளை அவ்வப்பொழுது எழுதி வெளியிட்டு வந்தார். டால்ஸ்டாய் ஒரு விஷயத்தை ஆராயத் தொடங்கினர் என்றல். அதன் அடித்தலத்தைக் காணமல் அவர் அயர்ந்து அமர்வதில்லை. இத்துடன் அவர் எல்லையற்ற தைரியமுடையவர். தாம் உண்மையென்று கண்ட முடிவுகளை அவர் உடும்புப் பிடியாகப் பிடித்துக்கொள்வார். எழுத்தாளர்கள், பத்திரிகைகள், பாதிரிமார்கள், பொதுமக்கள், அரசாங்கம், சக்கரவர்த்தி ஆகிய எவரையும், எதையும் பொருட்படுத்தாமல், அவர் பிரசாரம் செய்வார். இதனல் அரசாங்கம், அவர் எழுதிய ஒவ்வொரு விஷயத்தையும் நுட்பமாகக் கவனித்து, தனக்குப் பிடிக்காத விஷயங்களைத் தடை செய்து வந்தது. பாதிரிமார்கள், தங்களுக்குப் பிடிக்காத விஷயங்களைக் கொண்டு, அவரைத் தங்கள் திருச்சபையிலிருந்தே விலக்கிவிட்டனர்.

கிறிஸ்துநாதர் சொல்லிய உபதேசங்கள் உயர்வானவை என்று கூறுவதுடன் நில்லாது, டால்ஸ்டாய், கிறிஸ்து சொல்லிய ஒவ்வொரு விஷயத்தையும், ஒவ்வொரு வார்த்தையையும் நிறைவேற்ற வேண்டியது மக்கள் கடமை என்று பிரசாரம் செய்து வந்தார். இதற்காகக் கிறிஸ்து என்ன சொன்னர் என்பதைப் பற்றி, எல்லோரும் தெரிந்துகொள்ளும்படி, அவர் ஒரு நூலை எழுதி வெளியிட்டார். பெரிய வேதப் புத்தகத்தில் அடங்கிய கிறிஸ்துவின் போதனைகளை அவர் ஐந்தே வரிகளில் சுருக்கிக் கூறிவந்தார்:

1. ஒருபோதும் கோபப்படக் கூடாது.
2. விபசாரம் செய்யக்கூடாது.
3. ஆணையிட்டுச் சபதம் செய்ய வேண்டாம்.
4. தற்காப்புக்காகப் பலாத்காரத்தை மேற்கொள்ளக் கூடாது.
5. போரைத் தவிர்க்க வேண்டும்.

மனிதன் நல்லவனுக விளங்கவேண்டுமானல், அவன் தன்

தேவைகளைக் குறைத்துக்கொள்ள வேண்டும் என்பது அவர் கொள்கை. மனிதனிடம் மூன்று இயல்புகள் உள்ளன: 1. ஜடப்பொருளின் இயல்பு, 2. மிருக இயல்பு, 3. மனித இயல்பு; மனித இயல்பைக் கொண்டு மற்ற இரண்டு இயல்புகளையும் அடக்கியாள்வதுதான் நல்வாழ்க்கையாகும் என்று அவர் 'வாழ்க்கை' என்ற நூலில் விளக்கியிருக்கிறார். தனி மனிதன் தன் சுயநலத்திற்காகவே பாடுபட்டுக் கொண்டிருந்தால், அவன் ஒருகாலும் இன்பமடைய முடியாது என்பதையும், மற்ற மக்களுக்காக உள்ளன்புடன் உழைத்து, அவர்களுடைய இன்பத்திலிருந்தே அவன் பகிர்ந்து கொள்ள முடியும் என்பதையும் அவர் பல கதைகளிலே விளக்கியிருக்கிறார்.

செர்கியஸ் பாதிரியாரைப் பற்றிய இந்தக் கதையை டால்ஸ்டாய் தமது அறுபத்திரண்டாவது வயதில் எழுதினார். ஆகவே முதிர்ந்த அனுபவத்துடனும், சிறந்த கலைப்பண்புடனும் அவர் பாதிரியாரைப் பற்றிச் சித்திரிக்க முடிந்திருக்கிறது. அவருடைய மற்றைக் கதைகளைப் போலில்லாமல், இதில் நல்வாழ்வை நாடிச் செல்லும் ஒருவருடைய மனோதத்துவ வளர்ச்சியை டால்ஸ்டாய் விரிவாகக் காட்டியுள்ளார். காமத்தை வெல்வதற்காக எத்தனையோ துறவிகள் தங்கள் உள்ளங்களிலே பெரும் போராட்டங்கள் செய்திருக்கிறார்கள். ஆனால் அதைவிடக் கோரமானது புகழாசை என்பதை இதில் ஆசிரியர் தெளிவுபடுத்தியுள்ளார்.

இந்தக் கதையைப் படித்த மற்றொரு புகழ்பெற்ற ரஷ்ய எழுத்தாளரான **மாக்சிம் கார்க்கி**, 'இரக்கம் கொண்டு உரக்க அழுதுவிட்டேன்' என்று எழுதியிருக்கிறார். மிக உயர்ந்த கதாபாத்திரமாக செர்கியஸ் பாதிரியாரைப் படைத்துவிட்டு, கடைசியில் அவரைச் சேற்றுக்குள் ஆசிரியர் தள்ளிவிட்டாரே என்று அவர் வருந்தியிருக்கிறார். வியக்கத் தகுந்த முறையில் ஆன்ம வலிமை பெற்ற டால்ஸ்டாயைப் போல் இன்னொருவரைக் காண்பது அரிது என்று எண்ணும்படி இக்கதை அமைந்திருப்பதாக அவர் பாராட்டியுள்ளார்.

**ப. ராமஸ்வாமி**

# பொருளடக்கம்

# I

## புகழும் காதலும்

**பத்தொன்பதாம்** நூற்றுண்டின் மத்தியில், ருஷ்யத் தலைநகரான செயின்ட் பீட்டர்ஸ்பர்க் நகரில், பட்டாளத்தில் உயர்ந்த பதவி வகித்துவந்த ஸ்டீபன் என்பவர் தமது பதவியைத் துறந்து விட்டார் என்ற செய்தி எல்லோருக்கும் அதிக ஆச்சரியத்தை உண்டாக்கி விட்டது. அவர் வாலிப வயதினர், அழகுடையவர். அவர் சக்கரவர்த்தியின் ஆதரவுடன் இராணுவத்தில் மேலும் உயர்ந்த பதவியை அடைவார் என்றும், மகாராணியின் சேவையிலுள்ள, பெருங்குடியிற் பிறந்த ஒரு பெண்ணை மணந்து கொள்வார் என்றும் ஒவ்வொருவரும் எதிர்பார்த்திருந்தனர். அந்த நிலையில், அவர் இருந்த பதவியையும் துறந்து விட்டார், அடுத்த மாதம் திருமணம் செய்து கொள்வதாயிருந்த கன்னியையும் வேண்டாமென்று சொல்லிவிட்டார். அவருடைய சொத்துக்களையும் அவர் தமது சகோதரிக்கு எழுதி வைத்துவிட்டார். இவற்றிற்கு மேலாக, துறவியாகும் நோக்கத்துடன், அவர் ஒரு துறவிகளின் மடத்தை நாடியும் சென்று விட்டார். இவற்றிற்கெல்லாம் காரணங்களாயிருந்த விஷயங்களை அறியாதவர்களுக்கு இந்த நடவடிக்கைகள் யாவும் அதிசய

மாகவே இருந்தன. ஆனால் ஒரு படையின் தலைவரா யிருந்த ஸ்டீபனுக்குத் தாம் செய்ததே சரியென்றும், அந்த நிலையில் தாம் வேறு வழியில் நடந்திருக்க முடியா தென்றுமே தோன்றிற்று.

ஸ்டீபனுடைய தந்தையும் இராணுவத்தில் ஒரு 'கர்னல்'லாக இருந்தவர்; அவர் இறக்கும் பொழுது ஸ்டீபனுக்குப் பன்னிரண்டு வயது. அவர் தம் குமாரனை இராணுவ சேவைக்கு அனுப்ப வேண்டுமென்றும், அவனை வீட்டிலேயே இருக்கும்படி செய்துவிடக் கூடா தென்றும் தமது மனைவியிடம் தெரிவித்திருந்ததால், அந்த அம்மாள் அவ்வாறே மைந்தனைப் பட்டாளத் தலைமைக்குரிய பயிற்சிக்கு அனுப்பிவைத்தாள். பள்ளிப் படிப்பில் ஸ்டீபன் மிகுந்த கவனம் செலுத்தியதுடன், தமது திறமையாலும், உயர்குலத்தோர்க்கு இயல்பான பெருமையாலும், வகுப்பில் தனிப் புகழ்பெற்று விளங் கினார். கணிதத்தில் அவருக்கு மிகுந்த விருப்பம். குதிரையேற்றத்திலும், மற்றும் இராணுவத்தாரின் விளையாட்டுக்களிலும் அவர் முன்னணியில் நின்றார். அவர், அதிக உயரமாயிருப்பினும், அழகிய தோற்ற முடையவர். கட்டான உடலமைப்பும், கம்பீரமு முடையவர். நடத்தையிலும் அவர் மற்றவர்களுக்குச் சிறந்த வழிகாட்டியாக விளங்கினார். ஆனால், அவரிடம் கோபம் மட்டும் குடிகொண்டிருந்தது. குடி, விபசாரம் முதலியவைகளில் அவருக்கு நாட்டமே கிடையாது. எதிலும் அவர் உண்மையைக் கடைப்பிடித்து வந்தார். அவரிடம் சொல்லக்கூடிய ஒரே குறை அவருடைய கோபம்தான். சில சமயங்களில் கோபம் வந்துவிட்டால், அவர் தம்மை மறந்து, கண் தலை தெரியாமல், ஒரு

விலங்கு போல் ஆகிவிடுவார். ஒரு சமயம் கோபத்தில், தம்முடன் பயின்று கொண்டிருந்த மாணவன் ஒருவனைத் தூக்கிச் சாளரத்தின் வழியாக வெளியே எறியும் அளவுக்கு, அவர் ஆத்திரமடைந்தார். மற்றொரு சமயம், உணவுப் பொருள்களை மேற்பார்த்து வந்த காரியஸ்தர், தாம் முன்னால் சொல்லிய விஷயங்களைச் சொல்லவேயில்லை யென்று சாதித்து, பச்சையாகப் பொய் சொன்னார். உடனே ஸ்டீபன் தமது மேசை மேலிருந்த பணியாரத் தட்டை அவர் மேல் எறிந்து விட்டார். அத்துடன், எழுந்து சென்று அவரை நையப் புடைத்ததாகவும் மற்றவர்கள் பேசிக் கொண்டார்கள். இந்த ஒரு குற்றத்திற்காகவே ஸ்டீபனுக்கு உயர்ந்த பதவி கிடைக்காமல் போயிருக்கும், ஆனால் பள்ளி நிர்வாகி, இந்த விஷயம் வெளியே பரவாமல் செய்ததுடன், பொய் சொன்ன காரியஸ்தரையும் வேலையிலிருந்து நீக்கிவிட்டார்.

பதினெட்டாவது வயதிலேயே ஸ்டீபனுக்கு இராணுவத் தலைமைப் பதவி கிடைத்தது. அவருடைய படையிலிருந்தவர்களிலே பெரும்பாலோர் பணக்காரர் வீட்டு இளைஞர்கள். சக்கரவர்த்தி நிகோலாய் பாவ்லோவிச் அவரைப் பார்த்த சமயத்தில், அவருடைய மிடுக்கையும், துடிப்பையும் கண்டு வியந்து, அவருக்கு விசேடச் சலுகைகள் அளித்து வந்தார். விரைவிலே சக்கரவர்த்தியின் மெய்காப்பாளராகவும் ஸ்டீபன் வந்துவிடக்கூடும் என்று பலரும் எதிர்பார்த்தனர். ஸ்டீபனுக்கும் அந்தப் பதவியில் ஆசைதான். அதற்குக் காரணம் தாம் மேலே உயரவேண்டும் என்ற வேட்கையன்று, சக்கரவர்த்தியிடம் அவருக்கிருந்த அன்பு அவ்வளவு

அதிகம். அந்த அன்பைக் 'காதல்' என்றுகூடச் சொல்ல லாம். அவர் பயிற்சி பெற்று வந்த காலத்திலேயே சக்கரவர்த்தி அடிக்கடி இராணுவக் கல்லூரி மாணவர்க ளிடையே வந்து பார்ப்பதுண்டு. அந்தச் சமயங்களி லெல்லாம், ஸ்டீபன் அவருடைய நெடிய உருவத்தை யும், இராணுவ உடையையும், வளைந்த மூக்கையும், மீசையையும், கத்தரித்துவிட்ட தாடைகளிலுள்ள உரோ மக் கற்றைகளையும், கணீரென்று ஒலிக்கும் குரலில் அவர் மாணவர்களுக்கு வாழ்த்துக் கூறுவதையும் கண்டும், கேட்டும், ஆனந்தத்துடன் பரவசமாகி நிற்பது வழக்கம். பின்னல் ஸ்டீபன் ஒரு பெண்ணரசியை எவ்வளவு உற்சாகத்துடன் காதலித்தாரோ, அவ் வளவு உற்சாகத்துடன், அந்தக் காலத்தில் சக்கர வர்த்தியை நேசித்து வந்தார். அவரிடம் தாம் கொண் டிருந்த பக்தியையும், பாசத்தையும் நிரூபித்துக் காட்ட வேண்டுமென்பது ஸ்டீபனின் ஆவல். தம்மால் முடிந் ததை யெல்லாம் அவருக்காகத் தியாகம் செய்யவேண்டு மென்று அவர் விரும்பினர். சக்கரவர்த்தி நிகோலாய்க் கும் அந்த இளைஞருடைய பொங்கிப் பெருகி வந்த மகிழ்ச்சியைப் பற்றித் தெரியும். அது மேலும் மேலும் வளர்ந்து வரும் முறையில், அவர் நடந்து கொண்டார். அவர் கல்லூரி மாணவர்களுடன் தாமும் சேர்ந்து விளை யாடினர்; தம்மைச் சூழ்ந்து அவர்கள் குதூகலமா யிருக் கும்படி செய்தார்; ஒரு சமயம் பையன்களுக்கு ஏற்ற முறையில் தாமும் ஒரு பையனைப்போல நடந்துகொண் டார்; ஒரு சமயம் வயது முதிர்ந்த நண்பனைப் போல அவர்களுக்குப் புத்திமதிகள் சொன்னர்; ஒரு சமயம் தாம் மாட்சிமை மிக்க சக்கரவர்த்தி என்று அவர்கள்

உணரும் வண்ணம் நடந்து கொண்டார். முன்பு ஸ்டீபன் காரியஸ்தருடன் தகராறு செய்து கொண்ட சமயத்தில், ஒருநாள் அவர் சக்கரவர்த்தி அருகில் போயிருக்கையில், சக்கரவர்த்தி கோபத்தோடு கையை ஆட்டிக்கொண்டு, 'எனக்கு விஷயம் தெரியும். ஆனால் சில விஷயங்கள் எனக்குத் தெரியாமலிருந்தால் நலம். எல்லாவற்றையும் இங்கே வாங்கி வைத்துக் கொண்டிருக்கிறேன்!' என்று அவர் கூறினர். அப்படிக் கூறும்பொழுது, அவர் தம் நெஞ்சைத் தொட்டுக் காட்டினர்.

ஆனல் பிற்காலத்தில் அவர் அதைப் பற்றிக் குறிப்பிடவேயில்லை. கல்லூரியில் தேர்ச்சி பெற்ற மாணவர்கள் சக்கரவர்த்தியைப் போய்த் தரிசித்த சமயத்தில், அவர் பொதுவான சில உபதேசங்களை மட்டும் செய்தார். அவர்களுக்கு எப்பொழுது அவசியம் நேர்ந்தாலும், தம்மிடம் வருமாறும், அவர்கள் சக்கரவர்த்திக்கும் தாய்நாட்டிற்கும் விசுவாசத்துடன் பணிசெய்துவர வேண்டுமென்றும், தாம் எப்பொழுதும் அவர்களுக்கு உற்ற நண்பராகவே இருந்து வருவாரென்றும் அவர் தெரிவித்தார். எல்லோருக்கும் இதயம் இளகிவிட்டது. ஸ்டீபன் அவரால் தமக்கு ஏற்பட்ட நன்மைகளை எண்ணிக் கண்ணீர் பெருக்கினர். அத்தகைய நேசமுள்ள ஜார் சக்கரவர்த்திக்காகத் தமது ஆற்றல் அனைத்தையும் பயன்படுத்தி, அவருக்கே ஊழியம் செய்துவர வேண்டுமென்று விரதம் எடுத்துக் கொண்டார்.

ஸ்டீபன் பதவி ஏற்றுக் கொள்ளும்வரை, அவருடைய அன்னையும் சகோதரியும் அவர் பயின்றுவந்த பீட்டர்ஸ்பர்க் நகரிலேயே தங்கியிருந்தனர். அன்னை அங்கேயே யிருந்தால் மைந்தரை அடிக்கடி பார்த்துக்

கொள்ளலாம் என்று எண்ணியிருந்தாள். ஆனால் அவர் வேலைக்குச் செல்லுகையில், அவளும் மகளும், முதலில் மாஸ்கோவுக்குச் சென்று, பின்பு கிராமத்தில் தங்கள் சொந்த வீட்டுக்கே போய் விட்டார்கள். ஸ்டீபன் தமது சொத்தில் பாதியைத் தம் சகோதரிக்கு அளித்து விட்டார். எஞ்சியிருந்த பாதியிலிருந்து கிடைத்த வருமானம் அவருடைய செலவுகளுக்குக்கூடப் பற்றவில்லை. ஏனெனில் அவர் வேலை பார்த்து வந்த படை உயர்ந்த அந்தஸ்துள்ள செல்வர்களைக் கொண்டது. அதற்கு ஏற்ற முறையில் அவர் தம் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள அதிகச் செலவு செய்ய நேரிட்டது.

வெளித் தோற்றத்தில் ஸ்டீபன் திறமைசாலியாகவும், உயர்ந்த பதவிகளை வகிக்க வேண்டுமென்ற ஆர்வமுள்ளவராகவுமே தோன்றினர். ஆனால் உள்ளுக்குள்ளே அவர் நுட்பமான, தீவிர முயற்சியில் இடைவிடாமல் ஈடுபட்டிருந்தார். சிறு வயது முதலே அவருக்கு இத்தகைய முயற்சி உண்டு. அது பலதிறப்பட்ட வேலைகளுக்கும் பயன்பட்டு வந்தது. ஆயினும் அவருடைய குறிக்கோள் ஒன்றுதான்—அவர் எதை நாடினாலும், எதைச் செய்தாலும், அதில் வெற்றியடைய வேண்டும், மற்றவர்களுக்கு மேலாக அதைச் செய்து முடிக்கவேண்டும், மக்கள் அதைப் பார்த்து வியந்து புகழவேண்டும் என்பதுதான் அது. அறிவுத் துறையில், படிப்பதற்கு அவர் தொடங்கினால், புத்தகங்களை நன்றாகப் பயின்று, அவற்றைக் கரைத்துக் குடித்து, கண்டோரெல்லாம் மெச்சும்படியும், தம்மை மற்றோர்க்கு ஓர் எடுத்துக்காட்டாகக் கொள்ளும்படியும் அவர் விளங்குவார். ஒரு விஷயத்தை ஐயம் திரிபறக்

கற்றுத் தேர்ந்தபின்பு, அவர் அடுத்த விஷயத்தில் இறங்குவார். இவ்வாறுதான் அவர் வகுப்பில் முதலாவதாக விளங்கிவந்தார்; இராணுவப் பயிற்சி பெற்று வருகையில், ஒரு சமயம், பிரெஞ்சு மொழியில் பேசுவதற்கு அவருக்குத் தயக்கம் ஏற்பட்டதால், அவர் உடனே அம்மொழியை நன்ருகக் கற்று, ரஷ்யமொழியைப் போலவே அதிலும் வல்லுநராக விளங்கினர்; 'செஸ்' விளையாட்டில் அவருக்குப் பிரியம் ஏற்பட்டதும், உடனே அதிலும் பயிற்சிபெற்று உயர்ந்த திறமையைப் பெற்ருர்.

ஜார் சக்கரவர்த்திக்கும், தாய் நாட்டிற்கும் சேவை செய்ய வேண்டும் என்பது அவருடைய வாழ்க்கையின் பொதுவான இலட்சியம். இதைத்தவிர, அவ்வப்பொழுது அவர் நிறைவேற்ற வேண்டும் என்று ஏதாவது ஒரு காரியத்தை எண்ணிக் கொண்டே யிருப்பார். அது எவ்வளவு சிறிதா யிருந்தாலும், பெரிதா யிருந்தாலும், அவர் அதில் தீவிரமாக ஈடுபடுவார், அதற்காகவே உயிர் வாழ்வது போல வேலை செய்வார், அது நிறைவேறும் வரை அவர் ஓயமாட்டார். புகழுக்காக அவர் இடைவிடாமல் முயற்சிசெய்து வந்தார்; ஆனுல் அந்தப் புகழை அடைவதற்காகப் பல காரியங்களைச் செய்ய வேண்டி யிருந்ததால், அவர் அவைகளை ஒன்றன் பின் ஒன்ருகச் செய்து வந்தார். இதுவே அவர் வாழ்க்கையின் சாரமாக விளங்கிற்று. படையில் பதவி கிடைத்ததும், தாம் தலைசிறந்த தலைவராக விளங்க வேண்டுமென்ற ஆர்வத்துடன், அவர் பணியாற்றி வந்தார். இதனுல் அவர் அதிகாரிகளில் சிறந்தவர் என்று புகழ்பெற முடிந்தது. கோபம் ஒன்றுதான், தீமை விளைப்பதாயும்,

அவருக்குப் பகையாகவும் இருந்தது. ஒரு சமயம் நண்பர்களுடன் பேசிக் கொண்டிருக்கையில், அவர் தமக்கு நூலறிவு போதாது என்று கருதினர். உடனே தம் அறை நிறையப் புத்தகங்களை வாங்கி அடுக்கிக் கொண்டு, அவர் அவைகளைப் படிக்கவும், ஆராயவும் தொடங்கி, தம் நோக்கத்தில் வெற்றி பெற்ருர். சமூகத்தில் மேல்நிலையிலுள்ள செல்வர்களிடையே சம அந்தஸ்துடனும் பெருமையுடனும் பழகவேண்டு மென்று அவர் விரும்பியதால், நடனங்களை நன்ருகப் பயின்று வந்தார். இதனுல், அவர் இல்லாத பெரிய நடனக் கச்சேரியே இல்லையென்று சொல்லும்படி, அவரை எல்லாக் கச்சேரிகளுக்கும் அழைத்தார்கள். தேர்ந்தெடுத்த சிலர்மட்டும் ஆடும் நடனங்களிலும், அவருக்கு இடம் உண்டு. ஆயினும் இவைகளில் அவருக்குத் திருப்தியில்லை. மற்றெல்லாத் துறைகளிலும் அவர் முதலிடத்தைப் பெற முடிந்த போதிலும், சமூக அந்தஸ்தில் மட்டும் அவருக்கு முதலிடம் கிடைக்க வில்லை.

பொதுவாக உயர்ந்த வகுப்பிலுள்ளவர்களை நான்கு பிரிவாகப் பிரிக்கலாம்: செல்வம் மிகுந்து, அரண்மனை யிலும் செல்வாக்குள்ளவர்கள்; செல்வமில்லாமல், பிறப் பினுலும் பழக்கத்தாலும் அரண்மனையில் நெருக்க முள்ள வர்கள்; செல்வம் மட்டும் இருந்து, அரண்மனையில் செல்வாக்குள்ளவர்களோடு இணைந்து கொள்ள ஆசை யுடையவர்கள்; செல்வமும் இல்லாமல், அரண்மனையில் செல்வாக்கும் இல்லாமல், அப்படி உள்ளவர்களோடு சேர்ந்து கொள்ள விரும்புபவர்கள். இப்படித்தான் முற்காலத்தில், எங்கும், எப்பொழுதும் இருந்து

வந்திருக்கின்றனர். அந்தக் காலத்து ரஷ்யாவிலும் இந்த நான்கு பிரிவினரே மேல்வகுப்பாரா யிருந்தனர். ஸ்டீபன் முதற்பிரிவைச் சேர்ந்தவரல்லர். ஆனால் கடைசியாயுள்ள இரண்டு பிரிவினரிடையிலும், அவருக்கு அதிக மரியாதை இருந்து வந்தது. அவர் உயர்ந்த அந்தஸ்துடன் இருக்கவேண்டுமானல், மேல் வகுப்பைச் சேர்ந்த ஒரு பெண்மணியின் தொடர்பு கிடைத்தால் நலமென்று கருதினர். அவர் விரும்பிய படியே வாய்ப்பும் கிடைத்தது. ஆனால் தாம் பழகின இடங்கள் மேல் வகுப்பில் சற்று மட்டமானவை என்று தெரிந்ததும், அவர் அவைகளைவிட உயர்ந்த இடங்களை நாடலானர். அந்த இடங்களிலுள்ளவர்கள் அவரை வரவேற்று உபசாரங்கள் செய்த போதிலும், அவரைத் தங்களில் ஒருவராகக் கருதவில்லை. அவர் வெளியா ராகவே பாவிக்கப்பெற்று வந்தார். அவர்களுடைய ஒவ்வொரு பேச்சிலும், செயலிலும், அவர்களே அந்த வகுப்பில் நிரந்தரமா யுள்ளவர்களாயும், மற்றவர்கள் வெளியார்களாயும் இருப்பதைச் சுட்டிக்காட்டி வந்தார் கள். ஸ்டீபனும் அவர்களில் ஒருவராக ஆகிவிடவே விரும்பினர். அந்த நிலையை அடைவதற்குச் சில வழிகளும் இருந்தன. ஒருவழி சக்கரவர்த்திக்கு மெய்க் காப்பாளராக நியமனம் பெறுதல். இதை அவர் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார். மற்றொருவழி உயர்ந்த இனத்தைச் சேர்ந்த ஒரு மாதை மணந்து கொள்ளல். அப்படித் திருமணம் செய்துகொள்ள அவர் தீர்மானித் தார். பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்த மேரி என்ற பெண்ணை அவர் தேர்ந்தெடுத்தார். அவளுக்கு அரண் மனையில் நல்ல செல்வாக்கு இருந்தது, மிக உயர்ந்த

அந்தஸ்திலுள்ளவர்களும் அவளுடைய தயவை எதிர் பார்க்கும் உன்னத நிலையில் அவள் இருந்தாள். ஸ்டீபன் அவளைத் தேர்ந்தெடுத்தது தம் நிலையை உயர்த்திக் கொள்வதற்காக மட்டுமன்று. இயற்கை யிலேயே அவள் மிக்க எழிலுடன் விளங்கினாள், அவளிடம் அவருக்கு உண்மையிலேயே காதல் உண்டாகிவிட்டது. முதலில் அவள் அவரை அதிக ஆர்வத்துடன் வரவேற்கவில்லை, எனினும் பின்னால், திடீரென்று அதெல்லாம் மாறிவிட்டது. அவரிடம் அவள் அதிகப் பிரியம் காட்டினாள், அவளுடைய அன்னையும் மிகுந்த நேசத்துடன் விளங்கினாள்.

ஸ்டீபன் தமது திருமண ஆசையைத் தெரிவித்தார். அவர்களும் ஒப்புக்கொண்டு விட்டனர். அவ்வளவு எளிதாக அவர்கள் சம்மதம் தெரிவித்தது ஸ்டீபனுக்கு ஆச்சரியமாகவே யிருந்தது. அன்னையும், பெண்ணும், வழக்கத்திற்கு மாறாக, வியக்கத் தகுந்த முறையில் இணங்கியதில், ஏதோ விஷயம் இருந்தது. ஆயினும் ஸ்டீபன் காதலில் ஆழ்ந்திருந்தார், எனவே அப் பொழுது அவர் பார்வையும் மங்கியிருந்தது. அதனால், நகரில் ஒவ்வொருவரும் இரகசியமாகப் பேசிக் கொண்டிருந்த ஒரு விஷயம் - அவருடைய காதலி, சென்ற ஓராண்டுக் காலமாகச் சக்கரவர்த்தி நிகோலாய் பாவ்லோவிச் அவர்களின் ஆசைநாயகியாக இருந்து வந்தாள் என்பது - அவருக்கு மட்டும் தெரியாம லிருந்தது.

## மயக்கம் தெளிந்தது

திருமண நாளுக்கு இரண்டு வாரங்களுக்கு முன்னால், ஸ்டீபன் தம் காதலி அந்தக் கோடை காலத்தில் வசித்துவந்த மாளிகைக்குச் சென்றிருந்தார். அது மே மாதம், உஷ்ணம் அதிகமா யிருந்தது. அவர்கள் இருவரும் பூங்காவில் சிறிது நேரம் உலவிக் கொண்டிருந்தனர், பின்னர் சாலை ஓரத்தில் அமைந்திருந்த ஒரு பெஞ்சின் மேல் அமர்ந்து கொண்டனர், நடைபாதையில் நின்றுகொண்டிருந்த ஏராளமான எலுமிச்சை மரங்களின் நிழலிருந்ததால், அங்கே குளிர்ச்சியா யிருந்தது. அன்று மேரி துய்ய வெண்மையான இந்திய மஸ்லின் உடை அணிந்திருந்தாள். அந்த உடையில் அவள் மிகவும் அழகாகவே தோன்றினாள். அவள், உட்கார்ந்தபடியே, இடையிடையே தன் அருகிலிருந்த திடகாத்திர முள்ள வீரரைக் கடைக்கண்களால் பார்த்துக்கொண்டாள். ஸ்டீபனும் அவளிடம் பேசும் பொழுது, மிகவும் மென்மையாகவும, எச்சரிக்கையுடனும் பேசினார்; ஏதாவது ஒரு வார்த்தை அவளுடைய பரிசுத்தமான மனத்தைப் புண்படுத்திவிடுமோ என்ற அச்சத்துடன், அவர் மிகவும் கவனமாயிருந்தார். அவள் குனிந்த தலையுடன், அவருடைய பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள். கள்ளமில்லாத வெள்ளைச் சிந்தையுடன், மட மானைப் போல விளங்கிய அவள், அன்பே உருக்கொண்டது போலவும் இருந்தாள்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் மத்தியில், பல ஆடவர்கள், சிற்றின்ப சம்பந்தமாகத் தாங்கள் எவ்வளவு

தவறு செய்துவந்த போதிலும், பெண்கள் மட்டும் பரிசுத்தமா யிருக்க வேண்டும்—இருக்கிறார்கள் — என்று எண்ணி வந்தார்கள். அவர்கள் தங்கள் விருப்பம்போல் நடப்பதைத் தவறாகவே கருதுவதில்லை, ஆனால் அவர்களுடைய மனைவியர் மட்டும், தெய்விகக் கற்புடன், மிகத் தூயவராக இருக்க வேண்டுமென்று விரும்பினார்கள். அவர்கள் பழகிவந்த சமூகத்தில் எல்லாப் பெண்களும் தெய்விகக் கற்புள்ளவர்கள் என்றும் அவர்கள் நம்பி, அந்த மரியாதையுடனேயே அவர்களிடம் பேசியும் பழகியும் வந்தனர். அவர்களுடைய கருத்துக்களில் எவ்வளவோ தவறு இருக்கலாம், ஆடவர்கள் மட்டும் தம் விருப்பம் போல் திரியலாம் என்பதில் எவ்வளவோ கெடுதலும் இருக்கலாம்; ஆனால் பெண்கள் சம்பந்தமாக அவர்கள் கொண்டிருந்த மனப்பான்மை நற்பயன் அளிப்பதாகவே யிருந்தது. இக்காலத்தில் வாலிபர்கள், தாங்கள் எந்தப் பெண்ணைப் பார்த்தாலும், அவள் துணைதேடித் திரிவதாக எண்ணுவதற்கும், அக்காலத்து மனிதர்களின் எண்ணத்திற்கும் அடிப்படையிலேயே வேற்றுமை யிருந்தது. ஆடவர்கள் தங்களைத் தூய கற்புடையவர்களாகக் கருதுவதை அறிந்த பெண்டிரும், அந்தக் கருத்துக்கு ஏற்றபடி தாமும் உயர்ந்த நிலையிலிருக்க வேண்டுமென்று எண்ணி, கூடியவரை தங்களைத் தாங்களே காத்துக் கொண்டிருந்தனர். ஸ்டீபனும் ஆண் பெண் உறவு பற்றி 1840-ஆம் வருடத்து ஆடவர்களின் கருத்தையே கொண்டிருந்தார், தம் காதலியும் தெய்விகக் கற்பினள் என்றே அவர் எண்ணினார். அன்று மற்ற நாட்களைவிட அவருடைய காதல் உச்சநிலையை அடைந்திருந்தது. ஆயினும் அவர் உள்ளத்தில் அவளைப்பற்றி விகாரமான

காம வெறி சிறிதும் ஏற்படவில்லை. தம் காதலி எவருக்கும் இடம் கொடாத உத்தமி என்ற நினைப்பில் அவர் இன்பத்தில் திளைத்துக் கொண்டிருந்தார்.

அவர் எழுந்திருந்து, தமது உடைவாளின் உறையை ஊன்றிக் கொண்டு அவள் முன்பு நின்றார்.

"வாழ்க்கையில் எவ்வளவு இன்பம் ஏற்படும் என்பதை நான் இப்பொழுதுதான் உணர்ந்தேன், அதுவும் உன்னால்தான் ஏற்பட்டிருக்கிறது!' என்று அவர் கூறினார்.

அதைக் கேட்டதும், அவள் மெல்லப் புன்னகை செய்தாள். அவர்கள் இருவரும் மிகவும் நெருக்கமான உறவைப் பெற்றிருந்த போதிலும், அவர் அவளிடம் அதிகப் பழக்கமான முறையில் பேசக் கூச்சப்பட்டுக் கொண்டிருந்தார்.

அவர், 'இப்பொழுதுதான் என்னை நானே அறிந்து கொள்கிறேன். உன்னை நான் அடைவதற்குரிய உயர்ந்த தகுதிஎன்னிடம் இருந்தால், அதுவே பெருமைதான்!' என்று சொன்னார்.

'உங்கள் பெருமையை நான் நெடுங்காலமாக அறிந்திருக்கிறேன், அதனால்தான் நான் உங்களைக் காதலித்தேன்!' என்று அவள் மறுமொழி கூறினாள்.

அருகில் ஒரு பறவை இனிமையாகப் பாடத் தொடங்கிற்று. புதிதாய்த் துளிர்த்திருந்த இலைகள், திடீரென்று காற்றடித்ததால், அசைந்தாடின.

அவர் அவளுடைய கையை எடுத்து முத்தமிட்டார். அவர் கண்களில் நீர் துளிர்த்து நின்றது: அதன் பொருள் அவள் தம்மைக் காதலித்ததற்காக அவர் நன்றி செலுத்தினார் என்பதை அவள் புரிந்து கொண்டாள்.

அவர் பாதையிலே அங்கு மிங்கும் சிறிது உலவினர், வாய் திறந்து ஒரு வார்த்தையும் பேசவில்லை, பிறகு திரும்பி வந்து, அவள் பக்கத்தில் மீண்டும் அமர்ந்து கொண்டார்.

'நான் உன்னிடம் ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்பினேன். முதலில் நான் உன்னிடம் வந்தது ஒரு சுயநல நோக்கத்துடன்தான். உயர்ந்த வகுப்பாரிடையில் எனக்கு ஓர் அந்தஸ்து வேண்டுமென்று விரும்பினேன். ஆனால்...உன்னை நான் நன்ருகத் தெரிந்து கொண்ட பின்னர், உன்னோடு ஒப்பிட்டுப் பார்த்தால், அதெல்லாம் மிகவும் அற்பமாகப் படுகின்றது. இப்படிச் சொல்வதில் உனக்கு வருத்தமில்லையே?'

ஸ்டீபன் கேட்ட இந்தக் கேள்விக்கு அவள் பதில் பேசவில்லை, ஆனல் அவளுடைய கை மட்டும் அவர் கையைத் தீண்டிற்று.

அவளுக்குக் கோபமில்லை என்பதை அவர் தெரிந்து கொண்டார்.

'நீ என்னைக் காதலிக்கும்படியாக நான்தான் செய்துவிட்டேன் என்று நீ நினைப்பது போல் தோன்று கிறது. ஆனல்—நான் இப்படிப் பேசுவதற்கு மன்னித் துக்கொள்—என்னிடம் உனக்கு நம்பிக்கை இல்லாம லில்லை. ஆயினும் ஏதோ ஒரு விஷயம் உனக்கு மனக் கலக்கத்தை உண்டாக்கிக் கொண்டிருக்கிறது. அது என்ன விஷயம்?'

அவள் தான் சொல்லவேண்டிய விஷயத்தை வெளி யிட அந்தச் சந்தர்ப்பத்தை விட்டால் வேறு வாய்க்காது என்று கருதினள். எப்படியும், என்ருவது அவர் அதைக் கண்டுபிடித்துக் கொள்வார். ஆனல் இப்பொழுது—

இந்த நிலையில் அவர் தன்னைக் கைவிடத் துணிய மாட்டார். ஆனால், அவர் கைவிடத் துணிந்துவிட்டால், அவளால் அதைத் தாங்கவே முடியாது!

அவள் அவருடைய நெடிய உருவத்தை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்தாள். அவர் தோற்றம் கம்பீரமாகவே யிருந்தது. அவள் சக்கரவர்த்தியைக் காதலிப்பதைவிட அதிகமாக அவரை இப்பொழுது காதலித்தாள். சக்கரவர்த்திக்கு நாடாளும் உரிமை இல்லாதிருந்தால், ஸ்டீபனைவிடச் சக்கரவர்த்தியை அவள் மேலாகக் கருதியிருக்க மாட்டாள்.

'அப்படியானால், சொல்லுகிறேன், கேட்டுக் கொள்ளுங்கள்!' என்று அவள் பேசத் தொடங்கினாள்: 'நான் உங்களிடம் உண்மை முழுவதையும் சொல்லிவிட வேண்டும். அது என்ன என்று நீங்கள் கேட்கிறீர்கள். அது இதுதான்: நான் இதற்கு முன்பும் காதலித்திருக்கிறேன்.'

அவர் கையின் மேல் அவள் தன் கையை வைத்துக் கொண்டு கெஞ்சுவது போல் அமர்ந்திருந்தாள்.

அவர் ஒன்றும் பேசவில்லை.

'காதலித்தது யாரை என்பதைச் சொல்லட்டுமா? அவர்தாம், நமது சக்கரவர்த்தி.'

'அவரிடம் நாம் எல்லோரும்தான் பக்தி கொண்டிருக்கிறோம்! நீ பள்ளிக்கூடத்தில் படிக்கும் பொழுது என்று எண்ணுகிறேன்...'

'இல்லை, வெளியே வந்த பிறகு. அது ஒரு மயக்கம். அந்த மயக்கம் இப்பொழுது தீர்ந்துவிட்டது. ஆனால் நான் உங்களிடம் சொல்ல வேண்டியது...'

'ஆமாம், அதனால் என்ன?'

'அது வெறும் காதலா யில்லை...'

'அவள் கைகளை மேலே தூக்கித் தன் முகத்தை மறைத்துக் கொண்டாள்.

'என்னது! நீ அவருக்கு ஆட்பட்டுவிட்டாயென்று சொல்லுகிறாய்?'

அவள் பதிலுரைக்கவில்லை.

'நீ அவருடைய ஆசைநாயகியாக இருந்ததாகச் சொல்லுகிறாயா?'

இதற்கும் பதிலில்லை.

உடனே அவர் எழுந்து அவளுக்கு எதிர்ப்புறம் நின்றார். அவர் முகம், மரண வேதனையிலுள்ளது போல, வெளிறிப் போயிருந்தது. அவர் உதடுகள் துடித்தன. அவருக்கு ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. முன்பு ஒருநாள் அவர் சக்கரவர்த்தியைச் சந்தித்த பொழுது, அமர் தமது திருமண ஏற்பாட்டைப் பற்றி மிகவும் பாராட்டிப் பேசினார்.

'ஐயோ கடவுளே! நான் என்ன செய்து விட்டேன்!' என்று அவள் திடுக்கிட்டுக் கூவினாள்.

'என்னைத் தொடாதே! நீ என்னைத் தீண்டாதே! ஆ, எனக்கு எத்தகைய வேதனையை உண்டாக்கிவிட்டாய்!'

அவர் அங்கிருந்து கிளம்பி நேராக அவளுடைய மாளிகைக்குச் சென்றார். அங்கே முன் கூடத்தில் அவளுடைய தாயைக் கண்டார்.

' என்ன விஷயம், பிரபு ? ஒருமாதிரியாக...'

ஆனால் அவர் முகத்தைப் பார்த்ததும், அவள் பேச்சை நிறுத்திக்கொண்டாள். அவர் முகமெல்லாம் சிவந்து செங்காயாக இருந்தது.

அவளைப் பார்த்து, ' உங்களுக்கும் இது தெரியும் !' என்று அவர் கூப்பாடு பேட்டுப் பேசினார். ' உங்கள்

செயலை மறைத்துக்கொள்ள என்னை ஒரு போர்வையாக உபயோகிக்க எண்ணிவிட்டீர்கள்! நீங்கள் ஓர் ஆண் பிள்ளையா யிருந்தால், உங்களை...'

அவருடைய பலமுள்ள கை முஷ்டியை மேலே தூக்கிவிட்டார். ஆயினும், அவர் சட்டென்று திரும்பி, வீட்டை விட்டு வெளியே ஓடிவிட்டார்.

மேரியின் காதலர் வேறு எவராயிருந்தாலும், அவர் அந்த ஆளை அன்றே கொன்றிருப்பார். ஆனால் அந்த ஆள் அவருடைய மதிப்பிற்குரிய சக்கரவர்த்தியாக இருந்தார்.

மறுநாள் அவர் ஓய்வு வேண்டுமென்று மனு எழுதினர், அதே சமயத்தில் தமது இராஜீநாமாவையும் அனுப்பிவிட்டார். யாரையும் பார்க்க மனமில்லாமல், அவர் தமக்கு உடல் நலமில்லை என்று வெளியே தெரிவித்திருந்தார். விரைவிலே அவர் நகரத்தைவிட்டுக் கிராமத்திற்கும் சென்றுவிட்டார்.

கோடை காலத்தில் அவர் அங்கிருந்துகொண்டு தம் நிலபுலன்கள் சம்பந்தமாக வேண்டும் ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தார். கோடை முடிந்ததும், அவர் தலைநகருக்குத் திரும்பிச் செல்லாமல், துறவியாவதற்காக ஒரு மடத்தை நோக்கிச் சென்றார்.

அவருடைய தாய் மடத்தின் விலாசத்திற்கு ஒரு கடிதம் எழுதியிருந்தாள். திடீரென்று அவ்வளவு தீவிரமான முடிவுக்கு வரவேண்டாமென்று அவள் அதில் குறிப்பிட்டிருந்தாள். அதற்கு அவர், மற்றெல்லா யோசனைகளுக்கும் முன்னதாக ஆண்டவனின் அழைப்பைக் கவனிக்கவேண்டியது அவசியமென்றும், தமக்கு அத்தகைய அழைப்பு வந்துவிட்டதென்றும் பதில் எழுதி

ஞர். அவருடைய சகோதரிக்கு அவருடைய செருக்கும், உயர்ந்த ஆசையும் தெரிந்திருந்ததால், அவள் மட்டும் அவருடைய மனநிலையைப் புரிந்துகொண்டு, அவரிடம் அனுதாபப்பட்டாள்.

அவர் ஏன் துறவியாக விரும்பினுர் என்பதைப்பற்றி அவளுடைய கருத்து இதுதான். சிலர் அவருக்கு மேலான நிலையில் தாங்கள் இருப்பதாக எண்ணிக் கொண்டிருந்தனர், அவர்களுக்கும் மேலாகத் தாம் விளங்கவேண்டும் என்ற ஆசை காரணமாகவே அவர் அந்த முடிவைச் செய்திருந்தார். அவள் கருதியது சரி தான். துறவியாவதால், மற்றவர்களுக்கு மிக முக்கிய மாகத் தோன்றுகிற விஷயங்களை அவர் துச்சமாகக் கரு தித் தள்ள முடியும். பட்டாளத்திலிருக்கும்பொழுது அவ ருக்கும் அவை பெரிதாகவே தோன்றின. ஆனுல் இப் பொழுது அவர் உயர்ந்த ஒரு நிலையில் ஏறி நின்று கொண்டு, முன்பு தம்மால் பெரியவர்களாகக் கருதப் பட்டவர்களைவிட மேலான நிலையை அடைய முடியும். இவ்வாறு அவருடைய சகோதரி எண்ணியதும் சரி தான். ஆனுல் இத்துடன் வேருெரு காரணமும் இருந் தது. அது உண்மையான சமய வாழ்க்கையில் அவர் கொண்டிருந்த ஆர்வமாகும். மேரியைப்பற்றி அவர் தெளிவாய்த் தெரிந்துகொண்டு, மயக்கம் தெளிந்தபின், அவர் தமக்கு இழைக்கப்பட்ட அநீதியைப்பற்றித் தீவிர மாக எண்ணி வருந்தினுர். இதனுல் அவர் வேறு கதி யில்லை என்ற முடிவுக்கு வந்தார். அந்தக் கதியற்ற நிலை அவரை எங்கே கொண்டு சேர்த்தது? கடவுளிடம்- இளமையிலிருந்தே அவர் கொண்டிருந்த சமய ஆர்வத் திடம்.

## III

## செர்கியஸ் பாதிரியார்

**ஸ்டீ**பன் மடாலயத்திற்குப் போய்ச் சேர்ந்த சமயம் 'போக்ரோவ்' பண்டிகை நடந்துகொண்டிருந்தது.

இந்த மடத்தின் தலைவராயிருந்தவர் பெரிய மனிதர், அறிவாளி, கல்விமான், வழி வழியாக வந்த குருமார்களின் வரிசையைச் சேர்ந்த ஒரு குரு. அவருடைய குருவின் பெயர் **அம்வரோசி**, இவர் மகாரியின் சீடர். மகாரி **லியோனிடின்** சீடர், லியோனிட் **பெய்சி வெலிச்கோவ்ஸ்கி** என்பவரின் சீடர். ஸ்டீபன் அவரையே தம் குருவாக ஏற்றுக்கொண்டார்.

மடத்திலே வந்து சேர்ந்துகொண்டதில் ஸ்டீபனுக்கு மிகுந்த திருப்தி ஏற்பட்டது. மற்றவர்களைவிட அவர் மேல் நிலையை அடைந்துவிட்டார். அத்துடன், எதைச் செய்தாலும் குறைவறப் பூர்த்தியாகச் செய்வதே அவர் பழக்கமா யிருந்ததால், அங்கேயும், தமது புதிய வாழ்க்கையில் பூரணமான வெற்றி கிடைக்கும்படி நடப்பதில், அவருக்கு மகிழ்ச்சியே ஏற்பட்டது. படைத் தலைவரா யிருக்கும்பொழுது, அவர் ஒரு தலைவருடைய வேலைகளைக் குறைவறச் செய்வதுடன் நிற்கவில்லை, தாம் செய்யவேண்டியதற்கு, மேலாகவே செய்துவந்தார், கடமை என்று விதிக்கப்பட்டிருந்ததற்கு அப்பாலும் அவர் சேவை புரிந்துவந்தார். அதேபோல, இப்பொழுது துறவி என்ற நிலையிலும், சுறுசுறுப்பா யிருக்கவும், உணவைக் குறைத்துக் கொள்ளவும், பணிவுடனும், அமைதியுடனும், பரிசுத்தமாகவும் இருக்கவும் அவர் இடைவிடாது முயன்று வந்தார்; செயலில் மட்டுமின்றி,

சிந்தனையிலும் அவ்வாறே இருந்து வந்தார். குருவின் ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடப்பதிலும் அவர் விசேட சிரத்தை யெடுத்துக்கொண்டார். இதனால் அவருடைய வாழ்க்கை அதிகக் கஷ்டமில்லாமல் நடத்துவர முடிந்தது. அவர் இருந்த மடம் அடிக்கடி மக்கள் வரக்கூடிய இடம். அங்கே முற்றும் துறந்த துறவியா யிருந்து கொண்டு பல பணிகளையும் செய்து வருவதில் அவருக்குச் சற்று வெறுப்பு ஏற்பட்டபோதிலும், சில சமயங்களில் ஆசைகள் தோன்றியபோதிலும், குருவின் ஆணைக்குப் பணிதல் என்ற விரதத்தினால் இந்தக் குறைகளெல்லாம் நீங்கி வந்தன. 'ஏன், எதற்கு என்று கேள்விகள் கேட்கவேண்டியவன் நானல்லன், எனக்கு இட்ட வேலைகளைச் செய்துமுடித்து, என் கடமைகளை நிறைவேற்ற வேண்டும், புனிதமான சமயச் சின்னங்களைப் பாதுகாத்தல், தோத்திரப் பாடல்களைப் பாடுதல், அல்லது மடத்தின் கணக்குகளை எழுதுதல் ஆகிய எந்த வேலையாயினும் என் கடன் பணி செய்தலே' என்று அவர் தீர்மானித்துக் கொண்டார். குருவுக்குப் பணிதல் என்ற இந்த ஒரு பண்பால் எந்த விஷயத்தைப் பற்றிச் சந்தேகங்கள் தோன்றினாலும் மறைந்துவிடும். இந்தப்பண்பு இல்லாதிருந்தால், அவர் மிகவும் அல்லற்பட்டிருப்பார். ஆலயத்தில் வழிபாட்டிற்கு அதிக நேரமாகும், இடைவிடாமல் ஜனங்கள் வந்துகொண்டும், போய்க்கொண்டும் இருப்பார்கள், மற்றத் துறவிகளுடைய குணங்கள் வெறுப்பை உண்டாக்கும்—இத்தகைய சந்தர்ப்பங்களில் அந்தப் பண்பே ஊன்றுகோலாக நின்று உதவி வந்தது. இவைகளை யெல்லாம் அவர் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டதுடன், இவைகள்

வாழ்க்கைக்கு உற்ற துணைகள் என்றும், இவைகளால் மன அமைதி கிடைக்கிறது என்றும் கருதினுர். 'ஒரேமாதிரியான பிரார்த்தனைகளை ஒருநாளில் பலமுறை கேட்டுக்கொண்டிருப்பதற்கு என்ன அவசியம் என்பது எனக்குத் தெரியாது ; ஆனுல் அது அவசியம் என்பதுமட்டும் எனக்குத் தெரியும். அது அவசியம் என்று தெரிந்துகொள்வதால், அதில் எனக்கு மகிழ்ச்சி ஏற்படுகின்றது.'-இதுதான் அவருடைய அப்போதைய மனநிலை. உயிர் வாழ்தலுக்கு உணவு இன்றியமையாத அவசியமா யிருப்பது போல, ஆன்மிக வாழ்வுக்கு ஆன்மிக உணவான கோயில் பிரார்த்தனை அவசியமானது என்று குரு சொல்லியிருந்தார். இதை ஸ்டீபன் நம்பினுர். சில சமயங்களில் பிரார்த்தனைக்காக அதிகாலையில் எழுவது அவருக்குக் கஷ்டமா யிருந்தது. ஆயினும் பிரார்த்தனையால் மனச் சாந்தியும் மகிழ்ச்சியும் ஏற்பட்டு வந்தன. கீழ்ப்படிதல் என்ற உணர்ச்சியில்—தாம்செய்ய வேண்டும் என்று குருவால் விதிக்கப்பெற்ற கடமைகளை அப்படியே ஏற்றுக்கொள்வதில்—அவருக்கு இன்பமுண்டாயிற்று. அது வாழ்க்கையின் முக்கியமான தேவை என்பதால், அவர் தம்முடைய சொந்த விருப்பைப் படிப்படியாகக் குறைத்துக்கொண்டு, மேலும் மேலும் கீழ்ப்படிந்து அடக்கமா யிருப்பதுடன் நிற்கவில்லை, கிறிஸ்தவப் பண்பாடுகள் அனைத்தையும் பெற்ருக வேண்டும் என்றும் விரும்பினுர். தொடக்கத்தில் இவைகளையெல்லாம் எளிதில் அடைந்துவிடலாம் என்றுதான் அவர் எண்ணியிருந்தார். தம் சகோதரிக்கு எல்லாச் சொத்துக்களையும் அளித்ததற்காக அவர் மனம் வருந்தவேயில்லை. அவருக்கும் சோம்ப

லுக்கும் வெகுதூரம். அவரைவிடத் தாழ்ந்தவர்களிடம் அவர் தாழ்மையுடன் நடந்துகொள்வது எளிதா யிருந்த துடன், அதிலிருந்தும் இன்பம் கிடைத்தது. பேராசை, காமம் போன்ற உடல் சம்பந்தமான பாவங்களையும் வெல்வது எளிதாயிருந்தது. இவைகளைப்பற்றி யெல் லாம் குரு முதலிலேயே எச்சரிக்கை செய்திருந்தார். ஸ்டீபனிடம் அந்தப் பாவங்கள் இல்லை. எனவே அவர் மகிழ்ச்சியுடன் விளங்கினுர்.

ஆனுல் ஒரே ஒரு விஷயம்தான் அவரைத் துன் புறுத்தி வந்தது. அதுதான் அவர் மணந்துகொள்ளத் தீர்மானித்திருந்த பெண்ணைப் பற்றிய நினைவு அந்த நினைவுடன், இன்னும் என்னென்ன நடந்திருக்கும் என்பதைப் பற்றியும் அவர் விரிவாகக் கற்பனை செய்தி ருந்ததால், வேதனை அதிகமா யிருந்தது. சக்கரவர்த்தி முன்னுல் வேருெரு பெண்ணைக் காதலியாக வைத்துக் கொண்டிருந்தார். அவள் பின்னுல் திருமணம் செய்து கொண்டு, சிறந்த மனைவியாகவும், சீலமுள்ள தாயாக வும் விளங்கினுள். அவளுடைய கணவனுக்குப் பெரிய பதவியும் அளிக்கப் பெற்றது. அவர் செல்வமும் செல் வாக்கும் பெற்று விளங்கினுர். எல்லாவற்றிற்கும் மேலாக அவருடைய மனைவி, முந்திய வினைகளுக்கு வருந்தி, கழுவாய் தேடி, நல்ல முறையில் வாழ்ந்து வந்தாள். இந்த வரலாற்றைப் பற்றியும் ஸ்டீபன் சில சமயங்களில் எண்ணிப் பார்ப்பதுண்டு.

அவர் அமைதியுடன் இன்பமாயிருந்த வேளைகளில் இந்தச் சிந்தனைகள் அவர் மனத்தைக் கலக்கவில்லை, துயர மளிக்கவில்லை. இவைகளால், தாம் ஆசைத் தூண்டுதலுக்குத் தப்பி வந்து விட்டதில், அவருக்கு

மகிழ்ச்சியே ஏற்பட்டது. ஆனால் வேறு வேளைகளில், அவர் தற்போது வாழ்ந்துவரும் வாழ்க்கை, இருள் கவிந்து, வாடி உதிர்ந்து விடுவதுபோல் ஆகிவிடும். இந்தப் புது வாழ்வில் அவருக்கு இருந்த நம்பிக்கை குன்றிவிடும். இதைப்பற்றி அவர் கொண்டிருந்த கருத்தும் மாறிவிடும். இதற்குத் தம்மை ஆயத்தப் படுத்திக் கொள்ளும் ஆற்றலும் போய்விட்டது போலத் தோன்றும். உளளத்தில் முந்திய நினைவுகள் பல தோன்றிவீடும். அவர், 'ஏன் இந்தத் துறவு வாழ்க்கையை மேற்கொண்டோம்!' என்று வருந்தக் கூடிய நிலையும் உண்டாகும்.

எல்லாத் துயரங்களிலிருந்தும் விடுதலை பெறுவதற்குக் கீழ்ப்படிதலே மருந்து என்பதை அவர் மீண்டும் கண்டு கொள்வார். தமக்கு முன்னால் காத்திருக்கும் வேலைகளைச் செய்து முடித்தல், ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு மணி நேரத்திலும் பிரார்த்தனைகளை நடத்துதல் ஆகியவற்றால் உள்ளம் நைந்து உருகுதல் மாறிவிடும். எப்பொழுதும் போல் அவர் பிரார்த்தனை செய்து வந்தார், கூடுதலாகவும் செய்து வந்தார். பணிவோடு கீழே விழுந்து அவர் இறைவனை வணங்கினார். ஆயினும் இவையெல்லாம் அவருடைய உடலின் வேலைகளா யிருந்தனவே யன்றி, இவைகளில் அவருடைய உள்ளம் முழுதும் கவிந்திருக்கவில்லை. இவ்வாறு ஒரு நாள், இரண்டு நாள் கழிக்க முடியும், அதற்கு மேல் ஓடாது. ஆனால் அந்த ஓரிரண்டு நாட்களிலும் அவரை வெளியிலிருந்து யாரோ ஆட்டுவிப்பது போலவே கழியும். அப்படி ஆட்டுவித்தவர் கடவுளல்லர், வேறு ஓர் தீய சக்தியே அதைச் செய்து வந்தது. அந்த வேளை

களில், குரு சொன்னவைகளை மட்டும் அவர் செய்து கொண்டேயிருந்தார். அவருடைய வாழ்க்கை அவருடைய இச்சையில் நடைபெறவில்லை, குருவின் கட்டளைப் படியே அது இயங்கி வந்தது. இப்படிக் குருவிடம் சரணாகதி அடைந்திருந்ததில், அவருடைய ஆன்மாவுக்கு ஒருவிதச் சாந்தி கிடைத்திருந்தது.

இவ்வாறு அந்த மடாலயத்தில் ஸ்டீபன் ஏழு ஆண்டுகளைக் கழித்து வந்தார். மூன்றாவது வருட இறுதியில், அவர் துறவியாயிருந்ததுடன், போதகராகவும் நியமிக்கப் பெற்றார். அவருக்கு செர்கியஸ் என்ற பெயரும் சூட்டப் பெற்றது. இது அவருடைய ஆன்மிக வாழ்வில் முக்கியமான ஒரு நிகழ்ச்சி. நற்கருணைப் பிரார்த்தனையில் கலந்து கொள்வதில் அவருக்கு எப்பொழுதும் மன ஆறுதலும், ஆன்மிக எழுச்சியும் ஏற்படுவதுண்டு; இப்பொழுது அவரே தொழுகை நடத்தி, ஆராதனைகள் செய்து வந்ததில், அவருக்கு எல்லையற்ற இன்பம் ஏற்பட்டது. நாளடைவில் அவருடைய உணர்ச்சியின் வேகம் குறைந்துவந்த போதிலும், அந்த அயர்வும் விரைவில் நீங்கிவிடும் என்று அவர் நம்பியிருந்தார். இன்ப உணர்ச்சி குறைந்த போதிலும் ஆராதனை முறையிலிருந்த பழக்கம் மட்டும் மாறவில்லை.

மொத்தத்தில், மடத்திலேயிருந்த ஏழாவது ஆண்டில், செர்கியஸுக்கு ஒருவகைச் சோர்வு ஏற்பட்டது. அங்கே படிக்க வேண்டியவைகளையும், தேர்ச்சி பெற வேண்டியவைகளையும் அவர் ஒருவாறு முடித்துக்கொண்டார். மேற்கொண்டு அவருக்கு அங்கே வேலையில்லை.

அந்நிலையில் அவருக்கு ஏற்பட்டிருந்த அயர்வு அதிகரித்துக் கொண்டேயிருந்தது. அந்தச் சமயத்தில்,

அவருடைய அன்னையின் மரணச் செய்தியும், மேரி வேறொருவரை மணந்துகொண்ட செய்தியும் வந்தன. அவைகள் அவரைப் பாதிக்கவில்லை. அவருடைய நோக்கமெல்லாம் ஆன்மிக வளர்ச்சி ஒன்றிலேயே நிலைத்திருந்தது, அவருடைய ஆற்றல்களெல்லாம் அதற்கே பயன்பட்டு வந்தன.

அவர் பாதிரியாராக நியமனம் பெற்றபின், நான்காவது ஆண்டில், பிஷப் அவரிடம் மிகவும் பிரியமாயிருந்தார், மேலான பதவி ஏதாவது அளிக்கப் பெற்றால், அவர் அதை மறுக்க வேண்டாமென்று குருவும் சொல்லியிருந்தார். அப்பொழுது அவருக்கு மேல் பதவியைப் பற்றி ஆவல் ஏற்பட்டது. மற்றைச் சாமியார்கள் பதவி ஆசை கொள்வதை வெறுத்த செர்கியஸ் தாமும் அவர்களைப் போலவே நடந்து கொண்டார். தலைநகருக்கு அருகிலிருந்த ஒரு மடாலயத்தின் தலைவராக அவர் நியமனம் பெற்றார். அதை மறுத்துவிடலாம் என்று அவர் எண்ணிய போதிலும், அதை ஏற்றுக் கொள்ளும்படி குரு கூறினார். அதனால் அவர் அதை ஏற்றுக்கொண்டு, குருநாதரிடம் விடை பெற்றுக் கொண்டு, புதிய மடாலயத்திற்குப் புறப்பட்டுச் சென்றார்.

தலைநகருக்கு அருகாமையில் இருக்க நேர்ந்தது செர்கியஸின் வாழ்க்கையில் முக்கியமான வளர்ச்சியாகும். ஆசைகளைத் தூண்டிவிடக்கூடிய பல விஷயங்கள் அவரைச் சூழ்ந்திருந்தன, அவைகளை எதிர்த்து நிற்பதில் அவருடைய சக்தியெல்லாம் பயன் படுத்தப் பெற்றது.

முதலாவது மடத்தில் அவருக்குக் காம இச்சை யைத் தூண்டக்கூடிய சூழ்நிலை அதிகமில்லை. ஆனால் இங்கே அந்த இச்சை பயங்கரமான வேகத்துடன் எழுந்து நின்றது. நாளடைவில் அது குறிப்பிட்ட உருவாகவும் தொடங்கிற்று. ஊரில் நடத்தைப் பிசகுள் ளவள் என்று பெயர் வாங்கிய ஒரு பெண் அவருடைய கவனத்தைக் கவர்ந்தாள். அவள் அவரிடம் பேசித் தன் வீட்டிற்கு வரும்படியும் சொன்னாள். ஆனால் அவர் உறுதியுடன் மறுத்து விட்டார். அந்த ஆசை தம்மிடம் தலை விரித்தாடியதை அவர் உணர்ந்து, தம் குருநாத ருக்கு அதைப்பற்றி எழுதினார். தீட்சை பெறாத சகோ தரத் துறவி ஒருவரை அழைத்து, தமக்கு ஏற்பட்ட ஆசையை அவரிடம் சொல்லி, தாம் தொழுகைக்கு ஆலயத்திற்குச் செல்வதைத் தவிர வேறு வெளியே எங்கும் செல்லாதபடி அவர் தம்மைக் காத்து உதவ வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டார். இதிலெல் லாம் அவர் கௌரவம் பாவிக்கவில்லை, தம்மிலும் தாழ்ந்த ஒரு சகோதரரின் உதவியை அவர் துணிந்து நாடினார்.

செர்கியஸ் அந்த மடத்தின் தலைவரை விரும்ப வில்லை. அத்தலைவர் காரியவாதி, இலௌகிக விஷ யங்களில் மிகவும் ஈடுபட்டவர், பேராசையுள்ளவர். அவரிடம் செர்கியஸுக்கு அதிகமான வெறுப்பு இருந்து வந்தது. எவ்வளவு முயன்றாலும், அந்த வெறுப்பை அவர் நீக்கிக்கொள்ள முடியவில்லை. அவர் எல்லாவற் றையும் பொறுமையுடன் ஏற்றுக் கொண்ட போதிலும், அவருடைய மனத்தின் அடித்தளத்தில் இந்தத் துவே ஷம் நிலைத்து நின்றது. இந்தப் பாவகரமான விஷ யத்தை அவரால் அடக்கி ஒழிக்க இயலவில்லை.

அவர் அந்த மடத்திற்கு வந்த இரண்டாவது ஆண்டில் ஒரு விஷயம் நடந்தது. அதன் விவரம் வருமாறு: அப்பொழுது 'போக்ரோவ்' பண்டிகை. மாலைப் பிரார்த்தனை நேரத்தில் பெரிய மாதா கோயிலில் தோத்திரப் பாக்கள் பாடப் பெற்றன. வெளியிலிருந்து ஏராளமான அன்பர்கள் ஆலயத்திற்கு வந்திருந்தனர். மடத்தின் தலைவரே தொழுகையை நடத்திக்கொண்டிருந்தார். செர்கியஸ் பாதிரியார், வழக்கமாகத் தமக்குரிய இடத்தில் நின்றுகொண்டு, பிரார்த்தனையில் ஆழ்ந்திருந்தார். பிரார்த்தனையின்பொழுதுதான் அவருடைய உள்மனத்தில் போராட்டம் நடக்கும். அவர் தேவாராதனை செய்யாத நேரத்தில்தான் தம் குறைகளைப் பற்றி எண்ணிப் பார்ப்பது வழக்கம். முக்கியமாக வெளி ஜனங்கள் வருவதிலிருந்துதான் அவருக்கு எரிச்சல் ஏற்படும். பெரிய கனவான்கள், அதிலும் சீமாட்டிகள், வந்து போவது அவருக்குக் கஷ்டமாயிருந்தது. திடீரென்று சிப்பாய் ஒருவன் சில பெரிய மனிதர்களை அழைத்துக்கொண்டு வருவான். மற்ற மக்களை ஒதுக்கித் தள்ளிவிட்டு, அவர்களை முன்னால் கொண்டுபோய் நிறுத்துவான். பெண்டிர் பிரார்த்தனையை மட்டும் கவனித்துக் கொண்டிராமல், அங்குள்ள பாதிரிமார்களைக் குறித்துப் பேசுவார்கள். பேச்சினிடையில் அந்தப் பாதிரி இந்தப் பாதிரி என்று சுட்டிக் காட்டுவார்கள். முக்கியமாக அழகுடன் விளங்கிய செர்கியஸைக் குறிப்பிட்டும் பேசுவார்கள். அவர், அவர்களையெல்லாம் கவனிக்காமல் இருப்பதற்காகத் தமது மனவலிமையால் கண்களைத் திரையிட்டு மறைத்துக்கொள்வார். தம் சிந்தனை தவறிச் செல்லாமல் இருப்பதற்காகத் தம்மைத்

தாமே காத்துக்கொள்வார். ஆலயத்திலுள்ள விக்கிரகங்கள், அவைகளுக்கு முன்னல் எரிந்துகொண்டிருக்கும் மெழுகுதிரிகள், ஆராதனையில் ஈடுபட்டுள்ள குருமார்களைத் தவிர வேறு எதிலும் தமது பார்வை செல்லாதபடி அவர் தடுத்துக் கொள்வார்; பிரார்த்தனை அல்லது பாடலின் சொற்களைத் தவிர வேறு எதுவும் தமது செவிகளில் ஏருதபடி அவர் கவனித்துக் கொள்வார்; பல முறை கேட்டுக் கேட்டு அவர் தெரிந்து கொண்டிருந்த பிரார்த்தனைகளின்படி, செயலில் நிறைவேற்றவேண்டிய தம் கடமையைத் தவிர வேறு எதைப்பற்றியும் சிந்தனை செல்லாதபடியும் அவர் பார்த்துக்கொள்வார்.

இத்தகைய நிலையில் அவர் பிரார்த்தனைச் சமயத்தில், அவசியத்திற்குத் தகுந்தபடி, தலை வணங்கியும், கையால் சிலுவை அடையாளம் செய்துகொண்டும், நின்றுகொண்டிருந்தார். வழக்கம்போல் மனத்துள் போராட்டம் நடந்துகொண்டிருந்தது. சிந்தனையை அடக்கி, உணர்ச்சிகளை ஒடுக்கி வெற்றி பெறுவதுபற்றியே அவர் எண்ணமெல்லாம் ஒருநிலைப்பட்டிருந்தன. அந்த நேரத்தில் நிகோதிம் என்ற ஆலய மணியகாரர் அவரை நோக்கி அணுகிவந்தார். இவர் மடத்தின் தலைவரிடம் இச்சகமாய்ப் பேசுவார். தம் கருத்துக்களை அவர் ஏற்றுக்கொள்ளும்படி வற்புறுத்துவார். இந்தக் காரணங்களால் செர்கியஸுக்கு அவரைப் பிடிக்காது. மணியகாரர் அவர் முன்பு மிகவும் அதிகமான பணிவுடன் தலை வணங்கி, தலைவர் அவரை மடத்தின் பூசையறைப்பக்கம் வரச் சொன்னதாகத் தெரிவித்தார். செர்கியஸ் உடைகளைச் சரிப்படுத்திக்கொண்டு, அங்கிருந்த கூட்டத்தின

ருக்கு இடையூறு ஏற்படாமல், மெதுவாக நடந்து சென்றார்.

அப்பொழுது, 'லிஸா, லிஸா! அதோ வலது பக்கம் பார், அதுதான் அவர்!' என்று ஒரு பெண்ணின் குரல் கேட்டது.

'எங்கே? எங்கே? அவர் அவ்வளவு அழகாயில்லையே!'

அவர்கள் தம்மைப்பற்றித்தான் பேசிக்கொண்டிருந்தனர் என்பது அவருக்குத் தெரியும். அதைக் கேட்டதும் அவர், முன்பு அடிக்கடி வழக்கமாய்ச் சொல்லிக்கொள்வதுபோல, 'இறைவ! எங்களை ஆசைகளில் உழலாமல் காத்திடுவாய்!' என்று பன்முறை தமக்குள்ளே கூறிக்கொண்டார்.

பின்னர் அவர், கவிழ்ந்த தலையுடன், கண்களையும் தாழ்த்திக்கொண்டு, வெண்மையான உடைகளுடன் விளங்கிய, பாடுவோர் கூட்டத்தைச் சுற்றித் தாண்டிச் சென்று, வடக்குப்புற வாயிலின் வழியாக மடத்தினுள் நுழைந்தார். உள்ளே புகுந்ததும், வழக்கம்போல் விக்கிரகத்தின் முன்பு சிலுவைக் குறி செய்துகொண்டு, தரையில் படிந்து வணங்கிய பின்பே அவர் தலை நிமிர்ந்து தலைவரைப் பார்த்தார். தலைவர் அருகில் பளபளப்பான ஜரிகை உடைகளுடன் வேறு ஒருவரும் நின்றுகொண்டிருந்தார். அந்த ஆசாமியை செர்கியஸ் உள்ளே நுழையும்பொழுது கடைக்கண்ணால் முன்பே கவனித்திருந்தார்.

தலைவர் சுவர் ஓரமாக நின்றுகொண்டிருந்தார். குட்டையான அவர் கைகள் இரண்டும் அவருடைய பருத்த தொந்தியின்மேல் இருந்தன. கை விரல்களால்

தமது அங்கியில் தைத்திருந்த ஜரிகையைத் தடவிக் கொண்டு அவர் பக்கத்திலிருந்த கனவானிடம் சிரித்துப் பேசிக்கொண்டிருந்தார். அந்தக் கனவான் இராணுவ உடை அணிந்திருந்தார். அதில் ஜரிகை வேலைப்பாடு கள் செய்யப்பட்டிருந்தன. தோள்பக்கம் குஞ்சலங்கள் வைக்கப்பட்டிருந்தன. அவரைப் பார்த்தவுடன் அவர் ஒரு தளபதி என்பதை செர்கியஸ் தெரிந்துகொண்டார். அத் தளபதி ஸ்டீபனுடைய படையில் பதவி வகித்திருந் தவர். இப்பொழுது அவர் மிகவும் முக்கியஸ்தராகி யிருந்தது போல் தோன்றியது. ஏனெனில் மடத் தலை வர், தமது வழுக்கைத் தலையும், முகமும் சிவந்துபோகும் படி, அளவற்ற மகிழ்ச்சியுடன் அவருடன் குலாவிக் கொண்டிருந்தார். அந்தத் தளபதி பார்க்கவேண்டும் என்பதற்காகவே தலைவர் செர்கியஸை அழைத்திருந் தார் என்பது தெரிந்ததும், செர்கியஸுக்குக் கோபமுண் டாகி விட்டது. தளபதி முன்னாள் தோழரை ஒருமுறை பார்க்க விரும்பியதாகவும் தலைவர் தெரிவித்தார்.

'உங்களை இந்தத் தெய்விக உடையுடன் காணும் படி பாக்கியம் கிடைத்ததில் மிக்க மகிழ்ச்சியடைகிறேன். பழைய நண்பனாகிய என்னை மறந்திருக்கமாட்டீர்கள் என்றே நம்புகிறேன்!' என்று சொல்லிக்கொண்டே, தளபதி அவருடன் கை குலுக்குவதற்காகத் தம் கரத்தை நீட்டினார்.

தளபதியின் பேச்சைக் கேட்டுத் தலைவர் உள்ளம் பூரித்திருந்தார். தளபதியின் தலை நன்றாக வாரப்பட் டிருந்தது. முகமும் காந்தியுடன் விளங்கிற்று. அவர் திருப்தியுடன் இருந்தார் என்பதை அவருடைய புன் முறுவல் அறிவுறுத்திற்று. அவருடைய வாயி

லிருந்து திராட்சை மதுவின் வாடை வீசிக்கொண்டிருந்தது. தாடி மீசைகளில் சுருட்டு வாசனை கமழ்ந்து கொண்டிருந்தது. இவையெல்லாம் சேர்ந்து செர்கியஸுக்கு மனக்கொதிப்பை உண்டாக்கிவிட்டன. அவர் மீண்டும் தலைவரை வணங்கி, 'என்னைச் சமுகத்தில் அழைத்ததாக அறிந்தேன்!' என்று சொல்லித் தயங்கி நின்றார். அவர் நின்ற நிலையும், அவர் முகமுமே, 'எதற்காக?' என்று கேட்பது போலிருந்தன.

'ஆம், தளபதியைப் பார்ப்பதற்காக!' என்றார் தலைவர்.

செர்கியஸின் முகம் வெளுத்துப் போய்விட்டது.

துடிக்கும் உதடுகளுடன். அவர், 'ஐயா, ஆசைத் தூண்டுதல்களிலிருந்து தப்ப வேண்டுமென்று நான் உலகைத் துறந்தேன். தாங்கள் எனக்கு மறுபடி அத் தூண்டுதல்களை உண்டாக்குவது எதற்காக—அதுவும் இந்த ஆண்டவன் ஆலயத்தில், பிரார்த்தனை நேரத்தில்?' என்று வினவினார்.

தலைவருடைய முகமும் அதிகமாய்ச் சிவந்துவிட்டது. அவர் கடுகடுப்புடன், 'அப்படியானால், நீங்கள் போங்கள்!' என்று சொன்னார்.

மறுநாள், செர்கியஸ் தாம் மரியாதைக் குறைவாகப் பேசியதற்காகத் தலைவரிடம் மன்னிப்புக் கோரினார். சகோதரச் சாமியார்களிடமும் தமது வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டார். அன்றிரவு முழுதும் பிரார்த்தனையும் செய்தார். எனினும், அந்த மடத்தைவிட்டு வெளியேற வேண்டுமென்று அவர் முடிவு செய்தார். இதைப்பற்றி அவர் தம் குருநாதருக்கும் எழுதி, தாம் அவருடனே அங்கேயே வந்து தங்கியிருக்க விரும்பு

தாயும் தெரிவித்தார். தமது பலவீனத்தை உணர்ந்து, தூண்டுதல்களை அடக்கித் தாம் வெல்ல முடியாமைக்கு வருத்தம் தெரிவித்து, தாம் இன்னும் கர்வத்தைக் கைவிட முடியவில்லை என்பதையும் சுட்டிக்காட்டி, எப்படியும் தமக்குக் குருநாதருடைய துணை அவசியம் என்று அவர் விவரமாக எழுதியிருந்தார். அடுத்த தபாலில் குருநாதரிடமிருந்து இதற்குப் பதில் வந்தது. எல்லாத் துயரத்திற்கும் காரணம் செர்கியஸின் செருக்குத்தான் என்று அவர் எழுதியிருந்தார். செர்கியஸ் தம்மைத் தாழ்த்திக் கொண்டு பணிவை மேற்கொண்டது ஆண்டவனுக்காக அல்லவென்றும், திருச்சபையில் மேல் பதவிகளையும் கௌரவங்களையும் அவர் வேண்டா மென்று தியாகம் செய்ததும் ஆண்டவனுக்காக அல்ல வென்றும், எல்லாம் தம்முடைய செருக்கைத் திருப்தி செய்து கொள்வதற்காகவே செய்யப்பட்டன வென்றும் அவர் குறித்திருந்தார். 'எனக்கென்று நான் எதையும் விரும்பவில்லை, நான் சீலம் நிறைந்தவன்' என்று தமக்குத் தாமே பெருமை பேசிக் கொள்வதே அவர் நோக்க மென்றும் சுட்டிக்காட்டப் பெற்றிருந்தது. அதனல்தான் தலைவருடைய நடத்தையை அவரால் தாங்க முடியவில்லை. அவர் எல்லாவற்றையும் இறை வனுக்காகவே தியாகம் செய்ததாக எண்ணிக் கொண்டு, காட்சிக்காக வைக்கப் பெறும் ஒரு விலங்கைப் போல், தம்மைப் பிறர் கண்டு மெச்சும்படி வாழ்ந்து வந்தார் என்பதையும் குருநாதர் விளக்கியிருந்தார்.

'ஆண்டவனுக்காக நீர் மேல்பதவிகளைத் தியாகம் செய்திருந்தால், நீர் அவைகளைப் பற்றிய எண்ணமே இல்லாமல் இருப்பீர். இலௌகிகச் செருக்கு இன்னும்

உங்களிடம் இருக்கின்றது. என் குமாரரே, உம்மைப் பற்றி நான் சிந்தனை செய்தேன். உமக்காக நான் பிரார்த்தனையும் செய்தேன். ஆண்டவன் என் மனத்திற்கு அறிவுறுத்தியது இதுதான்; நீர் முன்போல் வாழ்ந்து வரவேண்டும், கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். உம்மைப்பற்றி நான் எண்ணிக் கொண்டிருக்கையில், இல்லேரியன் என்ற சாமியார் தமது ஆசிரமத்தில் காலமானார் என்ற செய்தி கிடைத்தது. பதினெட்டு ஆண்டுகளாக அவர் அந்த ஆசிரமத்தில் இருந்தவர். தம்பினோ மடத்துத் தலைவர். அவர் இடத்திற்கு வேறு ஒரு சாமியார் வந்திருக்கச் சம்மதிப்பாரா என்று கேட்டு எழுதியிருக்கிறார். உமது கடிதமும் என் முன்பு கிடக்கின்றது. நீர் போய்த் தம்பினோ மடத்தில் பெய்சி பாதிரியாரைப் பார்க்கவும். நானும் அவருக்கு எழுதுகிறேன். இல்லேரியன் இருந்த அறையிலேயே நீரும் தங்கியிருக்கலாம். அதைப்பற்றி அங்கே கேட்டுக் கொள்ளவும். இல்லேரியன் ஸ்தானத்தை உம்மால் பூர்த்தி செய்ய முடியாது; ஆனால் உமக்கு ஒதுக்கமான இடம் தேவை. ஏகாந்தத்தில் இருந்து வந்தால், உமது செருக்கை அடக்கிக் கொள்ள முடியும். உமக்கு ஆண்டவனுடைய ஆசிகள் உண்டாவதாக!'

செர்கியஸ் குருநாதருடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடந்தார். அவர் கடிதத்தைத் தலைவரிடம் காட்டி, அவருடைய அநுமதியைப் பெற்றுக் கொண்டார். தமது அறையைக் காலி செய்து, அதிலிருந்த தம் சாமான்களை யெல்லாம் மடத்திற்கே சேர்த்து விட்டு, தம்பினோ ஆசிரமத்தை நோக்கிப் புறப்பட்டுச் சென்றார்.

அங்கிருந்த தலைவர் வணிக வகுப்பைச் சேர்ந்தவர், நல்ல நிர்வாகி. அவர் செர்கியஸைப் பெருமையுடன் வரவேற்று, அவருக்கு இல்லேரியனுடைய அறையைக் காலி செய்து கொடுத்தார். முதலில் செர்கியஸுக்கு உதவி செய்யத் தீட்சை பெருத சகோதரர் ஒருவர் அனுப்பப் பெற்றூர். பின்னுல் அவர் தனிமையாயிருக்க விரும்பியதால், அந்தச் சகோதரரும் அங்கே செல்வதில்லை.

அந்த அறை பாறையில் குடையப் பெற்ற ஒரு குகை. இல்லேரியன் அங்கேதான் புதைக்கப்பட்டிருந்தார். அவருடைய சமாதி குகைக்குள்ளே தள்ளியிருந்த உள் அறையிலிருந்தது. வெளி அறையில் ஒரு சிறு மேசையும், புத்தகங்கள், விக்கிரகங்களுக்கான ஓர் அலமாரியும், ஒரு மூலையில் கோரைப் பாய் ஒன்றும் இருந்தன. குகையின் கதவு அடைத்துத் திறக்கும்படி அமைந்திருந்தது. குகைக்கு வெளிப்புறத்தில் ஓர் அலமாரி இருந்தது, ஒரு நாளைக்கு ஒரு முறை செர்கியஸுக்கு உரிய உணவு அதிலே கொண்டு வந்து வைக்கப் பெறும்.

இவ்வாறு செர்கியஸ் பாதிரியார் ஏகாந்தமாக வசிப்பவரானூர்.

# உல்லாச யாத்திரை

**கி**றிஸ்துநாதர் உயிர்த் தெழுந்த திருநாளைக்கு முந்திய 'லெண்ட்' தபசு தொடங்குவதற்கு மூன்று நாட்கள் இருந்தன. செர்கியஸ் ஏகாந்த வாசம் தொடங்கி ஆருவது ஆண்டு நடந்து கொண்டிருந்தது. பக்கத்து நகரம் ஒன்றில் உல்லாசப் பிரயாணம் செய்யும் ஒரு கூட்டத்தினர் வந்திருந்தனர். பண்டிகைக்குரிய பணியாரங்கள், திராட்சை மது முதலியவைகளை அருந்தி அவர்கள் ஆனந்தித்துக் கொண்டிருந்தனர். அவர்கள் பணக்காரர்கள். அவர்களில் இருவர் வக்கீல்கள், ஒருவர் செல்வம் மிகுந்த பண்ணையார், ஒருவர் ஓர் உயர்ந்த அதிகாரி, மற்ற நான்கு பேர்கள் ஸ்திரீகள்: ஒருத்தி அதிகாரியின் மனைவி, ஒருத்தி பண்ணையாரின் மனைவி, அடுத்தவள் கன்னியாயிருந்த அவளுடைய சகோதரி, நான்காவது ஸ்திரீ கணவரால் விலக்கப்பட்ட வாழாவெட்டி, அவள் நிறைந்த செல்வமுள்ளவள், அத்துடன் அழகியாகவும் இருந்தாள். அவள் ஓரிடத்தில் நிலைத்திருக்க மாட்டாள், அங்கும் இங்கும் சுற்றித் திரிவாள், அவள் தவருன நடத்தையுள்ளவள், நகரம் முழுவதும் அவளைப்பற்றி எத்தனையோ வதந்திகள் உலவி வந்தன. அவர்கள் எல்லோரும் உணவருந்திய பின், பிற்பகலில், வெளியே சென்று வருவதற்காக, சக்கரங்களில்லாமல் பனிக்கட்டிமீது குதிரையால் இழுத்துச் செல்லப்படும் வண்டிகளை அமர்த்திக் கொண்டு, புறப்பட்டார்கள்.

அன்று மாலைப் பொழுது இன்பகரமாக இருந்தது. பாதையும் மென்மையாகவும், உறுதியாகவும் இருந்தது. நகருக்கு வெளியே சுமார் ஏழு மைல்கள் சென்ற பிறகு அவர்கள் கலந்து பேசுவதற்காகக் கூடினார்கள்; மேற்கொண்டு முன்னே செல்வதா, அல்லது திரும்பி விடுவதா என்று யோசனை செய்தார்கள்.

அப்பொழுது விவாகரத்துச் செய்யப் பெற்ற ஸ்திரீ, 'இந்தச் சாலை எங்கே செல்லுகின்றது?' என்று வினவினாள்.

அவளுடைய தயவை எதிர்பார்த்து அவளையே சுற்றிக் கொண்டிருந்த ஒரு வக்கீல், 'தம்பினோவுக்குப் போகிறது. அது இங்கிருந்து எட்டு மைல் தூரத்திலுள்ளது,' என்று சொன்னார்.

'தம்பினோவிலிருந்து எங்கே போகிறது?'

'அங்கிருந்து கிறிஸ்தவ மடத்தைத் தாண்டி நெடுந் தூரம் செல்கின்றது.'

'அந்த மடம் செர்கியஸ் பாதிரியார் தங்கியிருக்கும் மடமா?'

'ஆம்.'

'அவருடைய முந்திய பெயர் ஸ்டீபன் அல்லவா? அந்த அழகிய துறவிதானே?'

'ஆம்.'

'சீமாட்டிகளே! கனவான்களே! நாம் அந்த ஸ்டீபனைப் போய்ப் பார்ப்போம்! தம்பினோவிலேயே சாப்பிட்டுவிட்டு, ஓய்வெடுத்துக் கொள்வோம்.'

'மடத்திலே சாப்பாடும் கிடைக்கும். அதுவும் நன்றாகவே யிருக்கும். நான் ஒரு வழக்கு விஷயமாகப் போயிருந்த பொழுது, அங்கேதான் தங்கியிருந்தேன்.'

வக்கீல் இவ்வாறு கூறியதைக் கேட்ட மகோவ்கின என்ற அந்த ஸ்திரீ, 'எனக்கு அதெல்லாம் வேண்டாம். நான் இரவில் ஸ்டீபனுடன் தங்கியிருப்பேன்,' என்றாள்.

'ஊஹூம். உன்னால் முடியாது, உன்னால் எல்லாம் முடியும் என்றாலும், இது மட்டும் முடியாது!'

'முடியாதா? அப்படி நீங்கள் பந்தயம் கட்டுவீர்களா?' என்று அவள் கேட்டாள்.

'முடிந்தால் நல்லதுதான். இரவில் அவருடன் நீ தங்கினால்—நீ எதை வேண்டுமாயினும் என்னிடம் பந்தயமாய்க் கேள்!'

'என் இஷ்டம்போல் கேட்கலாமா?'

'அதேமாதிரி நீயும் பந்தயம் கட்ட ஒப்புக் கொள்ள வேண்டும். நான் கேட்பதைக் கொடுக்க வேண்டும்!'

'அது சரிதான். நாம் போவோம்!'

வண்டிக்காரர்களுக்கு அவர்கள் பருகுவதற்கு மது அளித்தார்கள். தங்களுக்கு வேண்டிய மது, பணியாரங்கள், மிட்டாய்கள் முதலியவற்றை ஒரு கூடையிலே வேறாக எடுத்துவைத்துக் கொண்டார்கள். வண்டிக்காரர்கள் யாருடைய வண்டி முதலில் செல்வது என்று விவாதம் செய்தனர். அவர்களிலே இளைஞனை ஒருவன், சவுக்கைக் கையிலே எடுத்துச் சுண்டிக்கொண்டு, குதிரைகளை அதட்டி விரட்டத் தொடங்கினான். குதிரைகளின் மணியோசை கலகல வென்று ஒலித்தது. வண்டி உறை பனிமீது கிறீச்சிட்டுக் கொண்டு சென்றது.

வண்டி இரண்டு பக்கமும் ஆடிக்கொண்டு சென்றது. குதிரைகளும் தாமாகவே வேகமாக ஓடின. சாலையும் நல்லதா யிருந்ததால் வழி, கழிந்து கொண்டேயிருந்தது. வண்டிக்காரன் இலகானைப் பிடித்துக் கொண்டு

ஊக்கமாக ஓட்டினுன். முன் பக்கத்து ஆசனத்தில் அமர்ந்திருந்த வக்கீலும், அதிகாரியும் மகோவ்கினுவிடமும், அவள் பக்கத்திலிருந்த நண்பரிடமும் ஓயாமல் தொணதொண வென்று பேசிக்கொண்டே யிருந்தனர். ஆனுல் மகோவ்கினு தன் வெள்ளை மேலங்கியால் உடலை நன்ருக மூடிக்கொண்டு, வாய் திறவாமல், அசையாது அமர்ந்திருந்தாள். மற்றவர்கள் பேச்சைக் கவனிக்காமல், அவள் தானுகச் சிந்தனை செய்து கொண்டிருந்தாள். 'எப்பொழுதும் ஒரே மாதிரிதான்—எல்லாம் எப்பொழுதும் அப்படித்தான், எப்பொழுதும் ஒரே பயங்கரம்தான். செக்கச் செவேரென்று சிவந்த வழவழப்பான முகங்கள், அவைகளில் மதுவாடையும், புகையிலை நாற்றமும். எப்பொழுதும் ஒரே மாதிரியான எண்ணங்கள், எல்லாவற்றிற்கும் பின்னுல் ஒரேமாதிரியான ஆபாசம்தான்! இவர்கள் எல்லோரும் திருப்தியா யிருக்கிருர்கள், இதுதான் வாழ்வதற்கு ஒரே வழி என்று இவர்கள் நம்புகிருர்கள். சாகும்வரை இப்படிப் போய்க் கொண்டே யிருப்பார்கள். என்னுல் இப்படி முடியாது. இவற்றிலெல்லாம் எனக்கு அலுப்புத் தோன்றிவிட்டது. இவைகளைக் குலுக்கி, ஆட்டி, அடியோடு மாற்றி வைப்பதற்கு ஏதாவது தேவை யென்று நான் கருதுகிறேன். சாரடோவ் நகரிலேயோ, அல்லது வேறு எங்கோ, ஜனங்கள் எங்கோ செல்வதற்காகப் புறப்பட்டுப் பனியிலே உறைந்து உயிர் துறந்தார்களாம்—அது போல் நடக்க வேண்டும்! இந்த ஜனங்களால் என்ன செய்ய முடியும்? இவர்கள் நடத்தைதான் எப்படி யிருக்கும்? அருவருக்கத் தக்கதாகவே யிருக்கும் என்று நான் எண்ணுகிறேன். ஒவ்வொரு மனிதனும் தனக்காகவே

வாழ்கிருன். நானும்கூட அப்படித்தான்—நானும் அதே போல அருவருக்கத் தக்கவளே.\ ஆனுல் நான் பார்ப் பதற்காவது அழகாயிருக்கிறேன். இவர்களுக்கு அது தெரியும்...அந்தச் சாமியார் எப்படிப்பட்டவர் என்பதே எனக்கு ஆச்சரியமா யிருக்கிறது? அவருக்கு விஷயத் தில் ஆசையே யிராதா? இல்லே, அப்படி யிராது! அவர் களுக்கெல்லாம் வேண்டியது அது ஒன்றுதான். சென்ற வருடம் வந்திருந்த இராணுவ வீரனைப் போலத்தான் அவர்களும். அவன் வெறும் முட்டாளா யிருந்தான்!'

இவ்வாறு சிந்தனே செய்து கொண்டே அவள், பக்கத்திலிருந்த வக்கீலேப் பார்த்து, 'இவான் நிகொலே விச்!' என்று கூப்பிட்டாள்.

'என்னம்மா வேண்டும்?'

'அவருக்கு வயதென்ன இருக்கும்?'

'எவருக்கு?'

'ஸ்டீபனுக்கு.'

'நாற்பதுக்கு மேலிருக்கும் என்று எண்ணுகிறேன்.'

'அவர் வருகிறவர்களே யெல்லாம் அநுமதிக்கிருர் என்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன்.'

'எல்லோரையும் அநுமதிப்பார், ஆனுல் எல்லா நேரங்களிலும் அல்ல.'

'என் காலடியில் கிடக்கும் கம்பளியைக் கால்களே நன்ருக மறைத்து மூடும்படி போடுங்கள். இப்படியா தூக்கிப் போடுவது! இறுக்கமாக இழுத்து மூடுங்கள். இப்பொழுது சரிதான். ஆனுல் இதற்காகக் கால்களே நசுக்கிவிட வேண்டாம்!' என்ருள் மகோவ்கினு.

கடைசியாக அவர்கள் ஒருவாறு செர்கியஸ் சாமி யாரின் ஆசிரமம் இருந்த வனத்தை அடைந்தனர்.

மகோவ்கிஞ வண்டியிலிருந்து கீழே இறங்கிக் கொண்டு, மற்றவர்களே அதிலேயே செல்லும்படி கூறிஞள். அவர்கள் அவள் தனியாக இறங்கிச் செல்ல வேண்டாமென்று தடுத்துப் பார்த்தனர். அதனுல் அவளுக்குக் கோபம்தான் அதிகமாயிற்று. தன்னே விட்டு விட்டு, அவர்கள் சென்றுவிடும்படி அவள் மீண்டும் கூறிஞள். அவர்கள் புறப்பட்டு விட்டார்கள். அவள், தன் வெள்ளே மேலங்கியுடன், தனியே நடக்கலாஞள். அவள் பக்கத்தில் அமர்ந்திருந்த வக்கீலும், என்ன நடக்கிறதென்று கவனிப்பதற்காக, வண்டியை விட்டுக் கீழே இறங்கிக் கொண்டார்.

செர்கியஸ் சாமியார் ஏகாந்த வாசம் தொடங்கி அது ஆருவது ஆண்டு. அப்பொழுது அவருக்கு வயது நாற்பத்தொன்பது. அவர் வாழ்க்கை கஷ்டமாகவே யிருந்தது. கடுமையான உபவாசம், பிரார்த்தனை முதலியவற்ருல் கஷ்டமில்லை. அவர் உள்ளத்தினுள்ளே நடந்து வந்த போராட்டமே கஷ்டமாயிருந்தது. இது போல் அவர் முன்னுல் அநுபவித்ததில்லை. இந்தப் போராட்டத்திற்குக் காரணங்கள் இரண்டு: சந்தேகமும், காம இச்சையும். இரண்டும் எப்பொழுதும் சேர்ந்தே தோன்றி வந்தன. அவை இரண்டையும் வெவ்வேருன இரு எதிரிகளாக அவர் எண்ணிக் கொண்டார்; ஆனுல் உண்மையில் அவை ஒன்ருகவே இருந்தன. சந்தேகம் தெளிந்தவுடன், காமமும் மறையத் தொடங்கிற்று. ஆயினும் அவர், இரண்டையும் தனித் தனியாகப் பிரித்து, இரண்டு அசுரர்களை எதிர்ப்பதுபோல், எதிர்த்துப் போராடி வந்தார்.

அவருடைய சிந்தனை இவ்வாறு சென்றுகொண்டிருந்தது: 'ஓ, என் இறைவனே, பிரபுவே! எனக்கு ஏன் போதிய நம்பிக்கையை அளிக்க மறுக்கிறீர்? காமம்— அதைப்பற்றி எனக்குப் புரிகிறது. அந்தோனி முனிவரையும், மற்றும் பயிரையும்கூட அது வாட்டி வருத்திற்று. ஆனுல் நம்பிக்கை! அவர்களுக்கு உறுதியான நம்பிக்கை யிருந்தது; ஆனுல் எனக்கோ, நிமிடக் கணக்காகவும், மணிக் கணக்காகவும், நாள் கணக்காகவும் நம்பிக்கை இல்லாமற் போகிறதே! இவ்வளவு அழ

கான உலகம் பாவகரமானது என்றும், இதைத் துறந்து விட வேண்டும் என்றும் கூறினுல். இது ஏன் இருந்து வர வேண்டும்? இந்த ஆசையை நீர் ஏன் உண்டாக்கி யிருக்கிறீர்? ஆசை? ஆனுல் ஆசைதானே உலக இன் பங்களைத் துறந்து, மறுமையில் எனக்கு ஒரு நல்ல இடத்தைத் தேடிக்கொள்ளும்படி என்னைத் தூண்டி வருகின்றது? மறுமை — ஒரு வேளை—எதுவுமே இல்லையா?'

இந்தச் சிந்தனை அவர் உள்ளத்தில் தோன்றிய வுடனே, அதைக் கண்டு அவர் நடுக்கமுற்றுப் பின் வாங்கி, தம்மைத் தாமே நிந்தித்துக் கொண்டார்.

'நான் வெறும் மிருகம், மிருகம்! நான் முனிவராக வேறு வந்துவிட்டேன்!' என்று அவர் தம்மையே கடிந்துகொண்டார்.

உடனே அவர் பிரார்த்தனை செய்யத்தொடங்கினுர். ஜபம் செய்யத் தொடங்கியதும், அவருக்குத் தம்முடைய கம்பீரமான உருவத்தைப்பற்றிய நினைவு வந்தது. நீண்ட அங்கியுடன், மடாலயத்தில் தாம் பொலிவுடன் விளங்கிய தோற்றத்தைப்பற்றி எண்ணினுர். இல்லை யென்ற முறையில் தலையை ஆட்டிக்கொண்டு, 'இல்லை. அது உண்மை யன்று. அது போலித் தோற்றம். ஆனுல் —அதைக் கொண்டு நான் பிறரை ஏமாற்ற முடியும். ஆனுல் என்னையும், இறைவனையும் ஏமாற்றிக்கொள்ள முடியாது. இல்லை, நான் கம்பீரமாக இல்லை. இரங்கிப் பரிகசிக்கத் தகுந்த நிலையிலேயே நான் இருக்கிறேன்!' என்று அவர் எண்ணினுர். அவர், தம் நீண்ட அங் கியை மேலே தூக்கித் தம் கால்களைப் பார்த்துக் கொண்டு புன்னகை செய்தார்.

பிறகு அங்கியை முன்போல் தொங்கவிட்டுக் கொண்டு பிரார்த்தனை செய்யலானார். உடலை வளைத்து வணங்கியும், கையால் சிலுவைச் சின்னம் காட்டியும், அவர் முறைப்படி தொழுதார். பிரார்த்தனைக் கீதத்தில், 'இந்தப் படுக்கையே என் பாடையாகி விடுமோ?' என்ற அடி வந்தது. அப்பொழுது, 'தனித்திருக்கும் படுக்கையே பாடைதான்! பொய், இதெல்லாம் பொய்!' என்று சைத்தான் அவர் செவிகளில் ஓதுவது போல் அவருக்குத் தோன்றிற்று. முன்பு ஒரு கைம்பெண் ணோடு சேர்ந்து அவர் பாவம் புரிந்ததும், அவள் அங் கங்களும் அப்பொழுது நினைவுக்கு வந்தன. இத்தகைய எண்ணங்களை உதறித் தள்ளிவிட்டு, அவர் தொடர்ந்து பிரார்த்தனை செய்தார். பிறகு துறவிகளுக்குரிய விதி களை ஒருமுறை சொல்லிவிட்டு, தம்முடைய சுவிசேஷ நூலை எடுத்து அதில் ஒரு பகுதியைத் திறந்து பார்த் தார். 'ஆண்டவனே, நான் நம்பிக்கை கொள்கிறேன். என் நம்பிக்கையின்மையை உதறித்தள்ள நீர் உதவி செய்யவேண்டும்' என்று தொடங்கும் பகுதியை அவர் கண்டார். உடனே தம் மனத்தில் தோன்றிய சந்தே கங்களை யெல்லாம் ஒருபுறமாக ஒதுக்கிவைத்தார். நிலை யில்லாமல் ஆடிக்கொண்டிருந்த ஒரு பொருளை நிலை யாக நிறுத்திவைப்பது போல, அவர் தமது நம்பிக் கையை ஆட்டமுள்ள அடிப்படைமீது நிறுத்திவைத்துக் கொண்டார். நிறுத்திவிட்டு, அது அசைந்து விழுந்து விடாமல் இருப்பதற்காக, தாம் மெதுவாகப் பின்வாங் கிக் கொண்டார். வழக்கம்போல் மனோபலத்தால் கண் களின் பார்வையையும், செவிகள் கேட்பதையும் கட்டுப் படுத்திக் கொண்டார். சிறுவயது முதலே அவருக்குப்

பாடமாயிருந்த, ' இறைவ, ஏற்றுக்கொள்ளும், ஏற்றுக்கொள்ளும்!' என்ற பிரார்த்தனையை ஒருமுறை ஓதினர். அவருக்கு மனச் சாந்தி ஏற்பட்டதுடன், மனம் இன்ப உணர்ச்சியில் திளைக்கத் தொடங்கிற்று. அவர் சிலுவை அடையாளம் செய்துவிட்டு, தமது ஒடுக்கமான பெஞ்சின்மீது படுத்துக்கொண்டார். பெஞ்சின்மேல் பாய் ஒன்று விரிக்கப்பட்டிருந்தது. மெல்லிய அங்கி ஒன்றைச் சுருட்டி அவர் தலைக்கு உயரமாக வைத்திருந்தார். அப்படியே அவர் தூங்கிவிட்டார்; அதை ஆழ்ந்த உறக்கமென்று சொல்லமுடியாது. வெளியே வண்டி ஓடும் மணி ஓசைகூடக் கேட்டுக்கொண்டிருந்தது. அது கனவா நினைவா என்பது அவருக்குத் தெரியாது. அந்த நேரத்தில் வாயிற் கதவை யாரோ தட்டுவதைக் கேட்டு, அவர் முழுதும் விழித்துவிட்டார். அவர் எழுந்துஉட்கார்ந்தார். தாம் கேட்ட ஓசை உண்மையானதுதான என்ற சந்தேகம் ஏற்பட்டது. மீண்டும் கதவைத் தட்டும் ஓசை கேட்டது. ஆம், அவருடைய கதவைத்தான் யாரோ தட்டுகின்றனர். இடையில் ஒரு பெண்ணின் குரலும் ஒலித்தது.

ஐயோ, கடவுளே! இது உண்மையா யிருக்குமா? அர்ச்சிய சிரேஷ்டர்களான முனிவர்களுடைய வாழ்க்கைச் சரித்திரங்களில் சைத்தான் சில சமயங்களில் பெண் உருக் கொண்டு வந்தான் என்று அவர் படித்திருந்தது உண்மையா யிருக்குமா? ஆம், அது பெண் குரல்தான். அக் குரல் எவ்வளவு மென்மையானது, கூச்சத்தால் எவ்வளவு ஒடுங்கி யிருந்தது, எவ்வளவு கவர்ச்சியுள்ளதா யிருந்தது! அதிலிருந்து விலகிக் கொள்ள வேண்டும்!

அவர் காறி உமிழ்ந்தார்.

ஒருவரும் வந்திருக்கமாட்டார், அவராகக் கற்பனை செய்ததாகவே யிருக்கும்.

அவர் எழுந்திருந்து ஒரு மூலையில் இருந்த புத்தகம் வைத்துப் படிக்கும் பலகை அருகில் சென்று மெல்ல முழந்தாளிட்டுக் கொண்டார். முழந்தாளிடுவதிலேயே அவருக்கு ஒருவகையான சுகமும் இன்பமும் ஏற்பட்டு வந்தன. அவர் தலையால் வணங்கியதில் அவருடைய தலை உரோமம் நெற்றியில் வந்து விழுந்தது. முன் தலையில் அதிகமாக வழுக்கை விழுந்திருந்தது. அவர் அத் தலையைக் குளிர்ச்சியான பாயின்மீது கவிழ்த்துக்கொண்டார். (தரை அப்பொழுது வறட்சியாக இருந்தது.)

...அப்பொழுது அவர் மனனம் செய்துகொண்டிருந்த தோத்திரக் கீதம் பின்மென் பாதிரியார் அவருக்கு எடுத்துக் காட்டியது. அது மனமாசுகளைத் துடைக்க உதவும் என்றும் அந்தப் பாதிரியார் சொல்லியிருந்தார். அவர் எழுந்திருந்தார்; இறுகிய தசைகளுள்ள அவருடைய கால்கள் இளைத்து மெலிந்திருந்த அவரது உடலை எளிதாகத் தாங்கிக்கொண்டு நிமிர்ந்து நேராக நின்றன. அவர் அந்தக் கீதத்தைத் தொடர்ந்து சொல்ல விரும்பினார். ஆனால் அதற்குப் பதிலாக, தமது முயற்சி யில்லாமலே, வெளியே குரல் ஒலிக்கிறதா என்பதைக் கேட்க அவர் விரும்பினார். அதைக் கேட்க வேண்டும் என்று அவர் விரும்பினார். எல்லாம் அமைதியாகவே இருந்தது. மேலே கூரையிலிருந்து உருகி வழிந்த பனிக் கட்டியின் நீர்மட்டும் கீழே வைத்திருந்த தொட்டியில் சொட்டுச் சொட்டாக விழுந்துகொண்டிருந்தது. வெளியே உலகம் மூடுபனியால் மூடப் பெற்றுக்

குளிர் நிறைந்திருந்தது. எல்லாம் அமைதியாக, மிக மிக அமைதியாகவே இருந்தது. அப்பொழுது திடீரென்று சாளரத்தின் பக்கம் ஏதோ சலசலப்பு ஏற்பட்டது. தெளிவான குரல் ஒன்றும் கேட்டது—அதே மெல்லிய, கூச்சத்தால் ஒடுங்கிய குரல் ஒலித்தது; அது அழகுள்ள ஒரு வனிதையின் குரலாகத்தான் தோன்றிற்று.

'என்னை உள்ளே அநுமதியுங்கள், கிறிஸ்துவின் பெயரால் வேண்டிக் கொள்கிறேன்!' என்றது அக்குரல்.

அவர் தமது உதிரமெல்லாம் இதயத்துள் பாய்ந்து அப்படியே நிலையாக நின்றுவிட்டது போல உணர்ந்தார். அவருக்கு மூச்சுத் திணறிற்று.

'கர்த்தர் எழுவாராக, அவருடைய பகைவர்கள் திகைப்படைவர்களாக...'என்று அவர் முணுமுணுத்துக் கொண்டார்.

வெளியே யிருந்து, 'என்ன, நான் தீய தேவதை யில்லை!' என்று குரல் ஒலித்தது—அதைக் கொண்டு அவளுடைய இதழ்களில் புன்னகை படர்ந்திருப்பதாக, அவர் உள்ளிருந்தபடியே, எண்ணிக் கொண்டார். அவள் மேலும் பேசினாள்: 'நான் தீய தேவதை யில்லை! வழியைத் தவற விட்டு இங்கே வந்துள்ள பாவியான வெறும் பெண்தான். வேறு விதமாக எண்ண வேண்டாம். பனியால் பாதி உறைந்த நிலையி லிருக்கிறேன், தங்க இடம் தந்தருள வேண்டும்!' 'வேறு விதமாக...' என்று சொல்லும் பொழுது அவளே சிரித்துவிட்டாள்.

அவர் சாளரத்தின் கண்ணாடியில் முகத்தை வைத்துப் பார்த்தார். அதில் விக்கிரகங்களுக்கு முன்னால் அவர் ஏற்றி வைத்திருந்த மெழுகுதிரியின் பிரதிபிம்பமே தெரிந்தது. கண்களுக்கு மேலே கையைக் குவித்து

வைத்துக் கொண்டு அவர் மீண்டும் வெளியே நோக்கினார். மூடு பனியுடன் கலந்த இருளே தெரிந்தது. பிறகு ஒரு மரம் தெரிந்தது. அதற்கு வலது புறம்—வெள்ளை மேலங்கியுடனும், சிறு தொப்பியுடனும், ஒரு பெண் காணப்பட்டாள். அழகு வடியும் முகம்—அன்பு நிறைந்தது—அச்சத்தால் நடுக்க முற்றிருந்தது—அந்த முகம் அவர் பக்கமாக முன்னால் சாய்ந்து நோக்கிக் கொண்டிருந்தது—அவர் நின்ற இடத்திலிருந்து ஒன்று அல்லது இரண்டு அங்குல தூரத்திலேதான் அது காணப்பெற்றது. அவர்களுடைய கண்கள் சந்தித்தன. அவர்கள் ஒருவரை யொருவர் தெரிந்து கொண்டு விட்டனர். அவர்கள் முன்பு ஒருகாலும் சந்தித்ததில்லை—ஆம், சந்தித்ததே யில்லை; ஆனால் அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்ட பார்வை இருவரும் மற்றவரைப் புரிந்து கொண்டதாக இருந்தது. அதில் அவர் அதிகமாய் அவளைப் பற்றித் தெரிந்து கொண்டார். இந்தப் பார்வைக்குப் பின் தீய தேவதைகளைப் பற்றிய எண்ணத்திற்கே இடமில்லை. அவள் ஒரு பெண்தான்—சாதாரண, அன்புள்ள, அழகிய, கூச்சமுள்ள பெண் தான்!

'நீங்கள் யார்? உங்களுக்கு என்ன வேண்டும்?' என்று அவர் கேட்டார்.

'ஐயோ, முதலில் திறவுங்கள், நான் விறைத்துப் போய்க் கொண்டிருக்கிறேன் என்று சொன்னேனே!—நான் வழியைத் தவற விட்டு விட்டேன்!' என்று அவள் சற்று அதிகாரத்துடன் கூறினாள்.

'ஆனால் நான் ஒரு துறவி, ஏகாந்தமாக வசிக்கும் சந்நியாசி.'

'இருக்கட்டுமே கதவைத் திறவுங்கள்! இல்லாவிட்டால் உங்கள் ஜன்னலடியில் நான் விறைத்துச் சாக வேண்டியதுதான், நீங்கள் உள்ளே யிருந்து நன்ருகப் பிரார்த்தனை செய்யலாம்!'

'ஆனுல், எப்படி...'

'அட பாவமே! நான் உங்களைத் தின்றுவிட மாட்டேன். என்னை உள்ளே விடுங்கள், கடவுள் பெயரால் கெஞ்சுகிறேன்! அதிகக் குளிரால் வாடுகிறேன்!'

இப்பொழுது அவளுக்குக் கொஞ்சம் அச்சமுண்டாகிவிட்டது. அவள் கண்களில் நீர் துளிர்த்தது.

அவர் சாளரத்திலிருந்து திரும்பி உள்ளே சென்று முள் மகுடம் வைத்த கிறிஸ்துவின் விக்கிரத்தைத் திரும்பிப் பார்த்தார். 'ஆண்டவரே, எனக்கு உதவி செய்யவும், ஆண்டவரே எனக்கு உதவி செய்யவும்' என்று அவர் முணுமுணுத்துக் கொண்டு, சிலுவை அடையாளம் செய்து, வணங்கினுர். பிறகு அவர் வாயில் கதவண்டை சென்று, கையால் இருட்டில் தடவிக் கொண்டே, தாழைக் கண்டுபிடித்தார். வெளியே, காலால் அடியெடுத்து வைக்கும் ஓசை கேட்டது. அவள் சாளரத்தடியிலிருந்து கதவுப் பக்கம் வந்துகொண்டிருந்தாள். கதவடியில் தரையிலே தேங்கியிருந்த தண்ணீரில் அவள் காலை வைத்து விட்டாள் போலிருக்கிறது—திடீரென்று, 'ஓ!' என்று கூவினுள். அவருடைய கைகள் நடுங்கிக்கொண்டிருந்தன. தாழும் இறுக்கமா யிருந்ததால், அவரால் அதைத் தள்ளித் திறக்க முடியவில்லை.

'திறவுங்கள், திறவுங்கள்! என்னை ஏன் இப்படிக் காக்க வைக்கிறீர்கள்? நான் முற்றிலும் நனைந்துபோயிருக்கிறேன், உடல் விறைத்துக்கொண்டிருக்கிறது.

நான் இங்கே தவிக்கும் பொழுது, நீங்கள் உங்களுடைய ஆன்மாவைத் தவிர வேறு எதிலும் நினைவில்லாமல் இருக்கிறீர்களே!'

அவர் கதவை ஆட்டி அசைத்தார். தாழ் நெகிழ்ந்து விட்டது. அவர் அதைத் திறந்தார். கதவை அவர் மெதுவாக வெளியே தள்ள வேண்டுமென்று எண்ணினார். ஆனால் அதைப் பலமாகத் தள்ளிவிட்டார். அது அவள் மேல் பட்டுவிட்டது.

உடனே அவர், முற்காலத்தில் சீமாட்டிகளுடன் பழகிய நினைவோடு, 'ஓ, என்னை மன்னிக்கவும்!' என்றார்.

'மன்னிப்பு' என்ற ஒலியைக் கேட்டதும், அவளுக்குப் புன்னகை வந்துவிட்டது. அவர் அப்படியொன்றும் அசைக்க முடியாதவராக இல்லை யென்று அவள் கருதினாள்.

நிலையடியில் அவள் அவரைத் தாண்டி உள்ளே செல்லுகையில், 'ஒன்றுமில்லை, இதற்கு மன்னிப்பாவது!' என்று சொன்னாள். 'மன்னிப்புக் கேட்க வேண்டியவள் நான்தான். இவ்வளவு துணிவோடு நான் இங்கு வந்திருக்கவே மாட்டேன்—ஆனால் நிலைமை அவ்வளவு மோசமாகிவிட்டது!' என்றும் அவள் கூறினாள்.

அவர் வழியைவிட்டு விலகி நின்றுகொண்டே, 'உள்ளே வாருங்கள்!' என்றார்.

நெடுநாளாய் அவர் மறந்திருந்த மென்மையான வாசனை அவருடைய மூக்கைத் துளைத்தது. அவள் பாதை வழியாக அறைக்குள்ளே சென்றாள். அவர் வாயில் கதவை அடைத்தார், ஆனால் தாழைப் போடவில்லை; பிறகு அவரும் அறைக்குள் புகுந்தார்.

'இயேசு கிறிஸ்து ஆண்டவரே, கர்த்தரின் திருக்குமாரரே, பாவியாகிய என் மீது இரக்கம் கொள்ளும்,' என்று அவர் மனத்திலே பிரார்த்தனை செய்ததுடன், அவருடைய உதடுகளும் தாமாக அதை முணுமுணுத்துக் கொண்டிருந்தன.

'இங்கே உங்கள் வசதிபோல் இருந்து கொள்ளுங்கள்,' என்றார் அவர்.

அவள் அறையின் நடுவில் நின்றுகொண் டிருந்தாள். அவளுடைய உடையிலிருந்து நீர்த்துளிகள் வழிந்துகொண்டிருந்தன. அவள் வியப்புடன் அவரை வெறித்துப் பார்த்துக்கொண் டிருந்தாள். அவள் கண்களில் சிரிப்புத் தவழ்ந்துகொண்டிருந்தது.

'உங்களுடைய ஏகாந்தத்தை நான் வந்து குலைத்து விட்டதற்காக என்னை மன்னியுங்கள். ஆனால் நான் எந்த நிலையில் இருக்கிறேன் என்பதை நீங்களே பாருங்கள். நாங்கள் வெளியில் வண்டியிலே போய்க்கொண் டிருந்தோம். நான் நகருக்குத் தனியே நடந்து சென்று விடுவேன் என்று பந்தயம் பேசினேன். ஆனால் இடையில் வழி தவறிவிட்டது. இங்கே உங்களுடைய ஆசிரமம் இருந்திராவிட்டால்...'

இடையில் அவள் பேச்சை நிறுத்திக்கொண்டாள். அவர் முகத்தை அவள் கவனித்ததால், மேற்கொண்டு அவளால் பொய் சொல்லிக்கொண் டிருக்க முடியவில்லை. நிலைமை வேறு மாதிரி இருக்குமென்று அவள் எதிர்பார்த்திருந்தாள். அவள் கற்பனை செய்துகொண் டிருந்த அளவுக்கு அவர் அவ்வளவு அழகாயில்லை. ஆயினும், இலேசாக நரைத்து வந்த தலையும் தாடியும், நேராக நேர்த்தியாக அமைந்திருந்த நாசியும், கருமை

யான கண்களும் கொண்டிருந்த அவரை நேரே நின்று பார்த்ததில், அவர் அழகாயிருந்ததாகவே அவள் எண்ணினாள்.

அவருக்கும் அவள் பொய்தான் பேசி வந்தாள் என்பது புலப்பட்டது.

'ஓகோ, அப்படியா!' என்று அவர் அவளை ஒரு முறை பார்த்துவிட்டுக் கண்களைத் தாழ்த்திக்கொண்டார். 'நான் இப்பொழுது உங்களை விட்டுப் போகிறேன். இருக்கிற இடத்தில் வசதி செய்து கொள்ளுங்கள்!' என்று சொல்லிவிட்டு, அவர் விளக்கைக் கீழே எடுத்து வைத்து, அதில் ஒரு மெழுகு திரியையும் ஏற்றி வைத்தார். பிறகு அவளுக்கு வணக்கம் சொல்லிவிட்டுப் பின்புறம் இருந்த அறைக்குள் சென்றார். இரண்டு அறைகளுக்கும் நடுவிலிருந்த இடைவெளி வழியாக, அவர் ஏதோ கனமான பொருளை உருட்டிக் கொண்டிருந்த ஓசை அவள் காதில் பட்டது.

'நம்மைத் தனியாக விட்டுக் கதவை அடைத்து, அதன்மேல் கல்லையும் சாத்துவார் போலிருக்கிறது!' என்று அவள் எண்ணிச் சிரித்தாள். அவள் தன்னுடைய முரட்டுக் கம்பளி அங்கியைக் கழற்றி எறிந்தாள். தலையிலிருந்த தொப்பியையும் எடுத்தாள். அது அவளுடைய தலைமயிரிலும், பின்னல் வேலை செய்திருந்த சால்வையிலும் மாட்டிக்கொண்டிருந்தது. முன்பு சாளரத்தருகே நின்று பேசியபொழுது அவள் குளிரால் விறைக்கவில்லை. எப்படியாவது உள்ளே நுழையவேண்டும் என்பதற்காகவே அவள் விறைத்துப் போவதாகக் கூறினாள். கதவுப் பக்கம் வந்த சமயத்தில் அவள் பள்ளத்தில் ஒரு காலை வைத்துவிட்டதால், அது கணுக்கால்வரை நனைந்

திருந்தது; பூட்சுக்குள்ளும் நீர் நிறைந்திருந்தது. அவள் அவருடைய ஒடுக்கமான பெஞ்சின்மீது அமர்ந்து கொண்டு, தன் பூட்சுகளைக் கழற்றத் தொடங்கினாள். அவள் தங்கியிருந்த அந்த அறை மனோகரமா யிருந்த தாக அவள் எண்ணினாள். அது ஒடுக்கமான அறை தான், ஆனால் அது மிகவும் சுத்தமா யிருந்தது. அவள் அமர்ந்திருந்த பெஞ்சைத் தவிர அங்கே தரையில் வேறு சாமான்களில்லை. பெஞ்சுக்கு மேலே புத்தக அலமாரி ஒன்றும், ஒரு மூலையில் புத்தகம் வைத்துப் படிக்கும் பலகையும் இருந்தன. கதவின் அருகில் சுவரிலிருந்த ஆணிகளில் ஒரு நீண்ட அங்கியும், கம்பளிச்சட்டை ஒன்றும் தொங்கிக்கொண்டிருந்தன. புத்தகப் பலகையின் மேல் கிறிஸ்துவின் விக்கிரகமும், அதற்கு முன்னால் எரிந்துகொண்டிருந்த ஒரு விளக்கும் இருந்தன. அறையில் விளக்கின் எண்ணெயின் வாடையும், வியர்வை, அழுக்கின் நாற்றமும் வீசிக்கொண்டிருந்தன. அவளுக்கு, அந்த வாடைகள் உட்பட, எல்லாம் இனிமையாகவே தோன்றின.

அவளுடைய நனைந்திருந்த பாதங்கள் சங்கடப்படுத்தின. அதிலும் பள்ளத்தில் விழுந்த இடது பாதம் மரத்துப் போயிருந்தது. ஆகவே பாதங்களை வெளியே எடுத்துத் துடைத்துக் காயவைப்பதில் அவள் வேகமாக ஈடுபட்டிருந்தாள். அப்பொழுது அவள் மகிழ்ச்சியால் முறுவலுடன் விளங்கினாள். அவள் முன்பு தன் வக்கீல் நண்பரிடம் பந்தயம் பேசி வந்ததில் வெற்றி கிடைக்கும் என்பதில்கூட அவ்வளவு மகிழ்ச்சியில்லை—அழகும் கவர்ச்சியும் கொண்ட பாதிரியாரின் உள்ளத்தில், விசித்திரமான, அரிய, எழிலுள்ள அந்த ஆண்மகனின் உள்

ளத்தில், ஒரு கிளர்ச்சியை உண்டாக்கியதே பெரிய வெற்றி என்று அவள் எண்ணினாள். அவள் கருத்துப் படி அவர் இசைந்து வந்ததாக வெளிக்குத் தெரிய வில்லை. அதனால் என்ன?

'செர்கியஸ் சாமியார்! செர்கியஸ் சாமியார்! இது தானே உங்கள் பெயர், இல்லையா?' என்று அவள் உள் ளிருந்துகொண்டே திடீரென்று கேட்டாள்.

'உங்களுக்கு என்ன வேண்டும்?' என்று அவர் தாழ்ந்த குரலில் கேட்டார்.

'உங்களுடைய ஏகாந்தத்தைக் குலைத்ததற்குத் தயவுசெய்து என்னை மன்னியுங்கள். எனக்கு வேறு வழியில்லை, உண்மையாகவே இல்லை. எனக்கு உடம் பும் அசௌக்கியமா யிருந்தது. இப்பொழுதுகூட நோய் அதிகமாகிவிடக் கூடும். உடையெல்லாம் நனைந்து போய்விட்டது. என் பாதங்கள் பனிக்கட்டி போல் ஜில்லிட்டுப் போயிருக்கின்றன!'

'எனக்கும் வருத்தம் தான். ஆனால் இங்கே நான் செய்யக்கூடிய உதவி எதுவுமில்லையே!' என்று மெல் லிய குரல் மீண்டும் ஒலித்தது.

'வேறு வழியிருந்தால், நான் இங்கே வந்து தங்க ளுக்குத் தொந்தரவு கொடுக்கவே மாட்டேன். பொழுது விடியும்வரைமட்டும் நான் இங்கே தங்கியிருக்கிறேன்!'

அவர் பதில் பேசவில்லை. ஆனால் அவர் ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்ததைக் கேட்டு, அவர் பிரார்த்தனை செய்வதாக அவள் எண்ணிக்கொண்டாள்.

'நீங்கள் இந்தப் பக்கம் வரமாட்டீர்களே? ஏனென் றால், நான் உடைகளைக் கழற்றிக் காயப்போடப் போகி

றேன் !' என்று அவள் புன்னகை செய்துகொண்டே கேட்டாள்.

அவர் மறுமொழி பகரவில்லை. அவர் மெல்லிய குரலில் பிரார்த்தனை செய்துகொண்டிருந்த ஒலிமட்டும் கேட்டுக்கொண் டிருந்தது.

அவள் தன் காலில் பூட்ஸுக்கு மேலே அணிந் திருந்த ரப்பர் பூட்ஸைக் கழற்றுவதற்காக அதைப் பல மாகப் பிடித்து இழுத்துப் பார்த்தாள். அது வரவில்லை. அவளுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. சற்று உரக்கவே அவள் சிரித்துவிட்டாள். அந்தச் சிரிப்பின் ஒலி அவ ருடைய உள்ளத்தில் ஏதேனும் உணர்ச்சியை உண்டாக் கக்கூடும் என்று கருதி, அவள் மேலும் பலமாகச் சிரித் தாள். அவள் கருதியது சரிதான். அந்தச் சிரிப்பு— இயற்கையான, ஆனந்தமான, அன்பு நிறைந்த அந்தச் சிரிப்பு—அவர் உள்ளத்தில் கிளர்ச்சி செய்தது, அவள் நினைத்த முறையிலேயே அது வேலை செய்யத் தொடங் கிற்று.

அப்பொழுது அவளுடைய சிந்தனை இவ்வாறு ஓடிக் கொண்டிருந்தது: 'இத்தகைய மனிதரை ஒருத்தி காதலிக்க முடியும். அந்தக் கண்கள், சூதில்லாத, கம்பீர மான அவர் முகம்! அவர் எந்தப் பிரார்த்தனையை வேண்டுமானாலும் முணுமுணுத்துக்கொண் டிருக்கட் டும்—அவரிடம் உணர்ச்சி மிகுந்திருந்தது! பெண்க ளாகிய நம்மை யாரும் ஏமாற்ற முடியாது. சாளரத்தில் அவர் முகத்தை வைத்துக்கொண்டு, என்னைப் பார்த்த வுடன்—அது அவருக்கே தெரியும். அவர் அதை உணர்ந்து விட்டார். அவர் கண்களிலேயே அது தெரிந்துவிட்டது. அவருக்கு என்னிடம் காதல்

இருப்பதை அவர் உணர்ந்திருக்கிறார், என்னை அவர் விரும்புகிறார். ஆம், விரும்புகிறார்!'

ஒருவாறு முயற்சி செய்து அவள் தன் பூட்ஸுகளை யும், அவைகளுக்கு மேலிருந்த ரப்பர் பூட்ஸுகளையும் கழற்றி விட்டாள். அடுத்தாற்போல் கால் உறைகளைக் கழற்றவேண்டி யிருந்தது. அவை முழங்காலுக்கு மேல் வரை நீண்டிருந்ததால், அவள் தன் பாவாடையை மேலே தூக்கிக்கொண்டாள். அப்பொழுது அவள் வெட்கப்பட்டு, 'வெளியே வந்துவிடாதீர்கள்!' என்று ஒருமுறை கூவினாள்.

ஆனால் அடுத்த அறையிலிருந்து மறுமொழி எதுவும் வரவில்லை. 'முணுமுணு' என்று பிரார்த்தனை ஒலி மட்டும் கேட்டுக்கொண்டே யிருந்தது. அத்துடன் ஆள் நடமாடும் ஓசையும் கேட்டது.

'தொழுகையில் கீழே விழுந்து பணிகிறார்,' என்று அவள் எண்ணிக்கொண்டாள். 'இதனாலெல்லாம் ஒன்றும் பலிக்காது. அவர் உள்ளத்தில் என்னைப்பற்றி எண்ணிக்கொண் டிருக்கிறார். நான் அவரைப்பற்றியே எண்ணிக்கொண் டிருக்கிறேன். என் பாதங்கள் குளிர்ந் திருப்பதுபோல, அவருடைய உணர்ச்சியும், வேகமில் லாமல், மந்தமா யிருக்கிறது'—இவ்வாறு எண்ணிக் கொண்டே, அவள் கால் உறைகளைக் கழற்றிவிட்டுப் பாதங்களைப் பாயின்மேல் பலமாகத் தட்டினாள். பாதங் களுக்குச் சூடுண்டாவதற்காக, அவள் கால்களை மடக்கி உடலோடு சேர்த்துக்கொண்டு, கைகளால் முட்டுக்களைக் கட்டிக்கொண்டு, சிறிது நேரம் அமர்ந்திருந்தாள். எதிரேயிருந்த சுவரைமட்டும் அவள் வெறித்துப் பார்த் துக்கொண்டிருந்தாள். அப்பொழுது அவள், 'நாப்

இன்னும் காட்டுப் பாதையிலேயே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறோம். இது என்ன அமைதி! என்ன முடிவு என்பதே தெரியவில்லை,' என்று சிந்தனை செய்தாள்.

அவள் எழுந்திருந்து, கால் உறைகளைக் குளிர் காயும் கணப்பண்டை எடுத்துச் சென்று ஒரு கம்பியின் மீது அவைகளைக் காயப்போட்டாள். பிறகு அங்கிருந்து தரைமீதிருந்த பாயை வெறுங் கால்களால் மிதித்துக் கொண்டு மீண்டும் பெஞ்சுக்கு வந்து அமர்ந்து கொண்டாள். அடுத்த அறையில் அப்பொழுது எவ்வித ஓசையுமே இல்லை. அவளுடைய கழுத்தில் ஒரு நாடாவில் தொங்கிக்கொண் டிருந்த சிறு கடிகாரத்தை அவள் உற்றுப் பார்த்தாள். மணி இரண்டாகி யிருந்தது. அவர்கள் வந்த வண்டிகள் மூன்று மணிக்குத் திரும்பிச் செல்ல வேண்டியவை. புறப்பட்டுச் செல்ல ஒருமணி நேரமே இருந்தது.

அந்த ஒருமணி நேரத்தையும் அவள் தனியேதான் கழிக்க வேண்டுமா? அது மிகவும் கேவலம்! அவள் அதை விரும்பவில்லை. அவரை அறைக்குள் வரும்படி அழைக்க வேண்டியதுதான்!

'சாமியாரே! செர்கியஸ் சாமியாரே! ஐயா, ஸ்டீபன்!' என்று அவள் அவருடைய பூர்வாசிரமப் பெயரையும் சொல்லி அழைத்தாள்.

பக்கத்து அறையில் அரவமே யில்லை.

'இவ்வளவு கடுமையான சித்தமா உங்களுக்கு? நான் உங்களை அழைக்கவே மாட்டேன். அவசியமில்லாமல் உங்களை ஏன் அழைக்கப்போகிறேன். எனக்கு உடல் நலமில்லை. என்ன நோய் என்றும் தெரிய

வில்லை!' என்று அவள் சோகம் நிறைந்த குரலில் கூவி ஞள். 'இது அதிசயம்தான்!' என்று சொல்லிக் கொண்டே அவள் பெஞ்சின்மேல் சாய்ந்தாள். நோய் கண்டுவிட்டது என்பதை அவள் உணர்ந்தாள். அவ ளுக்கு மிகவும் களைப்பாயிருந்தது. உடல் முழுதும் ஒரே வலி, காய்ச்சல் உண்டானதுபோல, அவள் உடல் நடுங்கிற்று.

'இங்கே வந்து எனக்கு உதவி செய்யுங்கள்! எனக்கு என்னவோ செய்கிறது. என் அன்பரல்லவா நீங்கள்! தயவுசெய்து வாருங்கள்!'

அவள், தன் சட்டையின் கழுத்துப் பித்தானைக் கழற்றி, மார்பு முழுவதையும் திறந்து வைத்தாள். கைகளை நீட்டி வைத்துக்கொண்டாள்.

'ஐயா! ஐயா!'

இவ்வளவு நேரமும் அவர் பின் அறைக்குள் நின்று தொழுதுகொண்டேயிருந்தார். மாலைப் பிரார்த்தனை களையெல்லாம் அவர் சொல்லி முடித்துவிட்டார். இப்பொழுது அசைவில்லாமல் நின்று, மூக்கின் முனை மேல் பார்வையைச் செலுத்தி, மனத்தால் பிரார்த்தனை செய்துகொண்டிருந்தார்.—ஆன்மிக முறையில், 'கர்த்த ராகிய ஏசு கிறிஸ்துவே, தேவ குமாரரே, என்மீது இரக்கம் கொள்ளும்!' என்று கூறிக்கொண்டிருந்தார்.

ஆனுல் இடையில் நடந்ததெல்லாம் அவருக்குத் தெரியும்—அவள் உடையைத் தூக்கும்பொழுது பட்டின் சலசலப்பு அவர் செவியில் பட்டது. கால் உறையில்லா மல் அவள் வெறும் பாதங்களால் பாயை மிதித்துக் கொண்டு நடந்ததும், அவள் கைகளால் ஈரமாயிருந்த கால்களைத் தேய்த்ததும் ஆகிய ஓசைகளை யெல்லாம்

அவர் கேட்டுக்கொண்டுதான் இருந்தார். அவருக்குத் தமது பலவீனம் தெரிந்து போய்விட்டது. எந்த நிமிடத்திலும் தாம் நிலை தவறிவிடக் கூடும் என்பதை அவர் உணர்ந்தார்; அதனால் இடைவிடாமல் தொழுது கொண்டே யிருந்தார். தேவதைக் கதைகளிலே ஒரு வீரனைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கும். அவன் எப்பொழுதும் பார்வையை முன்னாலேயே செலுத்தி நடந்துகொண்டே யிருக்க வேண்டும், பின்புறம் திரும்பிப் பார்க்கவே கூடாது என்று கட்டளையிடப் பட்டிருப்பான். அவனுடைய மனநிலை எப்படி யிருந்திருக்குமோ, அதே நிலையில் செர்கியஸ் இருந்தார். அவரைச் சுற்றிலும், அவர் தலைக்கு மேலும் அபாயம் காத்துக் கொண்டிருந்தது. இலேசாக அடி சறுக்கி விட்டால், நாசம்தான். அந்த அபாயத்தைக் கண்ணால் ஒரு முறை கூடப் பாராமல் இருந்தால்தான். அவர் தப்பித்துக் கொள்ள முடியும். ஆயினும் திடீரென்று அதைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை அவரைப் பற்றிக்கொண்டு விட்டது. அதே சமயத்தில் அவள் அவரைக் கூவி யழைத்தாள்:

'உங்களுக்கு மனிதத் தன்மையே யில்லை. நான் இறந்து போகக் கூடும்!'

ஆம், அவர் அவளிடம் செல்லத் தீர்மானித்து விட்டார்—முன்பு ஒரு சாமியார் விலைமாதின்மீது ஒரு கையும், அனல் தட்டில் ஒரு கையும் வைத்துக்கொண்டதுபோல், தாமும் செல்ல வேண்டுமென்று முனைந்து விட்டார். ஆனால் அங்கே அவரிடம் அனல் தட்டு இல்லை. அவர் அறையைச் சுற்றிப் பார்த்தார். விளக்கு இருந்தது. அவர் எரிகின்ற சுடரின்மீது ஒரு விரலை

நீட்டினர், முகம் கடுகடுத்தது, எனினும் சூட்டினை அவர் தாங்கிக் கொண்டார். பின் சிறிது நேரம்வரை அவருக்குச் சூடே தெரியவில்லை; ஆனல் திடீரென்று —விரல் புண்பட்டதோ, அல்லது எவ்வளவு புண்பட்டது என்பது அவருக்குத் தெரியவில்லை—அவர் வெறுப்போடு முகத்தைச் சுளித்துக் கொண்டு, கையை வெளியே எடுத்துவிட்டார். முடியாது, அவரால் இது முடியாது என்று தெரிந்துவிட்டது.

'ஐயோ, ஆண்டவன் பெயரால் அழைக்கிறேன்! உள்ளே வந்து எனக்கு உதவி புரியுங்கள்! ஐயோ, நான் இறந்து கொண்டிருக்கிறேன்!'

அவர் அழிவுற வேண்டியதுதானு? இவ்வளவு காலமும் செய்த தவமும், நோற்ற நோன்பும் வீணுக வேண்டுமா? இல்லை, அவர் தம்மை அழித்துக் கொள்ள விரும்பவில்லை.

'இதோ ஒரு கணத்தில் அங்கு வருகிறேன்,' என்று சொல்லிக்கொண்டே அவர் தம் அறைக் கதவைத் திறந்து, அவள் இருந்த அறை வழியே, அவளைத் திரும்பிப் பாராமலே சென்று, பின்வாசல் பக்கத்தை அடைந்தார். அங்கேதான் அவர் விறகு கீறுவது வழக்கம். இருளில் தடவிப் பார்த்து அங்கிருந்த கட்டையொன்றைக் கண்டு கொண்டார். அதன்மீது தான் விறகுகளை வைத்து அவர் கீறுவார். அருகில் சுவர்மீது சாத்தியிருந்த கோடரியையும் அவர் ஒரு கையில் எடுத்துக் கொண்டார்.

'ஒரு நொடியில் வருகிறேன்,' என்று மீண்டும் அவர் ஒருமுறை கூவினர். பிறகு கோடரியை வலது கையில் பிடித்துக் கொண்டு, இடது கை ஆள்காட்டி

விரலைக் கட்டையின் மேல் வைத்து, கோடரியை ஓங்கி விரலின்மீது பாய்ச்சினர். விரலின் இரண்டாவது இணைப்புக்குக் கீழே வெட்டுப்பட்டு, அது துண்டாகி விட்டது. அதே பருமனுள்ள சுள்ளியைக் காட்டிலும் அது எளிதில் வெட்டப்பட்டு, மேலே துள்ளி, முதலில் கட்டையின் முனையிலும், பிறகு தரையிலும் போய் விழுந்து விட்டது.

அது தரையிலே விழுந்த ஓசை அவர் செவியிலே கேட்டது. அதுவரை அவருக்கு வலி எதுவுமில்லை. விதனம் இல்லையென்று அவர் எண்ணும் பொழுதே வலி வந்துவிட்டது. அனல் எரிப்பது போல் விரலில் கடுமையான விதனம் ஏற்பட்டது. மற்ற விரல்களின் மீது சூடான உதிரம் வழிந்து கொண்டிருந்ததையும் அவர் உணர்ந்தார். உடனே அவர் அந்த விரலைத் தமது மேலங்கித் துணியால் சுற்றி உடலோடு சேர்த்து அமுக்கிக் கொண்டார். பிறகு அவர் அந்த ஸ்திரீயின் முன்னால் நின்று, கண்களைத் தாழ்த்திக் கீழே பார்த்துக் கொண்டு, 'உங்களுக்கு என்ன வேண்டும்?' என்று அமைதியாகக் கேட்டார்.

வெளிறிப் போயிருந்த அவருடைய முகத்தையும், துடித்துக் கொண்டிருந்த இடது கன்னத்தையும் பார்த்தவுடன், அவள் வெட்கத்தால் தலைகுனிந்தாள். உடனே துள்ளி யெழுந்து, அவள் தன் மேலங்கியை எடுத்து உடலைச் சுற்றி மூடி மறைத்துக் கொண்டாள்.

'நான் வேதனைப்பட்டு விட்டேன்...எனக்குத் தடுமன் பிடித்திருக்கிறது........நான்........செர்கியஸ் சாமி...நான்...'

அவர் தலைநிமிர்ந்து பார்த்தார்; அப்பொழுது அவர் கண்களில் அமைதியான களிப்புத் தென்பட்டது. அவர் பேசலானார்:

'அருமைச் சகோதரியாரே! அழிவில்லாத உங்களுடைய ஆன்மாவை ஏன் நரகத்திற்கு ஆளாக்க வேண்டும்? ஆசைத் தூண்டுதல் இந்த உலகிற்கு வரத்தான் செய்யும்; ஆனால் எவர் மூலம் அது தோன்றுகிறதோ அவருக்கு நாசம்தான்...ஆண்டவனைத் தொழுங்கள், நம்மை அவர் மன்னிக்கும்படி பிரார்த்தனை செய்யுங்கள்!'

அவள் கேட்டுக்கொண்டே நிற்கையில், அவருடைய முகத்தை உற்று நோக்கினாள். அப்பொழுது திடீரென்று ஏதோ தரையில் சொட்டிக் கொண்டிருக்கும் ஓசை கேட்டது. அவள் கீழே குனிந்து பார்த்தாள். அவருடைய கையிலிருந்து உதிரம் அங்கி வழியாகக் கீழே பாய்ந்து கொண்டிருந்ததைக் கண்டாள்.

'உங்கள் கையை என்ன செய்து விட்டீர்கள்?'

சிறிது நேரத்திற்கு முன்பு அவள் கேட்ட ஓர் ஓசை நினைவுக்கு வந்தது. உடனே விளக்கைக் கையில் எடுத்துக் கொண்டு, அவள் பின் வாசலுக்குச் சென்று பார்த்தாள். அங்கே இரத்தத்தில் தோய்ந்த விரல் கிடப்பதை கண்டாள். அவரைப் பார்க்கிலும் அதிகமாக அவள் முகம் வெளிறிப் போய்விட்டது. அவள் திரும்பி உள்ளே வந்து அவரிடம் பேச முயன்றாள். அதற்குள் அவர் தம் அறைக்குச் சென்று கதவைத் தாழிட்டுக் கொண்டார்.

'என்னை மன்னியுங்கள், என் பாவத்தை நீக்கிக் கொள்ள நான் என்ன பரிகாரம் செய்யவேண்டும்?' என்று அவள் கேட்டாள்.

'போங்கள்!'

'உங்கள் விரலுக்குத் துணி வைத்துக் கட்டுகிறேன்.'

'போங்கள்!'

அவள் வாய் பேசாமல் அவசர அவசரமாகத் தன் உடைகளை அணிந்து கொண்டாள். மேலங்கியையும் மாட்டிக் கொண்டபின், அவள் வண்டிகள் வரும் மணி ஓசையைக் கேட்பதற்காகப் பெஞ்சின்மேல் அமர்ந்து கொண்டாள். விரைவிலே மணி ஓசையும் கேட்டது.

'செர்கியஸ் சாமி, என்னை மன்னித்து விடுங்கள்!'

'போங்கள். கடவுள் மன்னிப்பார்!'

'செர்கியஸ் சாமி, நான் என் வாழ்க்கையை மாற்றிக் கொள்கிறேன். என்னைக் கைவிட்டு விடாதீர்கள்!'

'போங்கள்!'

'என்னை மன்னித்து, எனக்கு ஆசி கூறி அனுப்புங்கள்!'

'பரமபிதாவின் பெயராலும், அவர் திருக்குமாரர் பெயராலும், போய்விடுங்கள்!' என்று அடுத்த அறையிலிருந்து குரல் கேட்டது.

அவள் அழுது கொண்டே அறையை விட்டு வெளியேறினாள். வக்கீல் அவளை எதிர்கொண்டு அழைத்துச் சென்றார்.

வண்டியை நெருங்கியதும் அவர், 'சரி, பந்தயத்தில் தோல்வி எனக்குத்தான் போலிருக்கிறது! அதிர்ஷ்டமில்லை!...நீ எந்த ஆசனத்தில் அமர்ந்து கொள்ளப் போகிறாய்?' என்று கேட்டார்.

'எதுவானாலும் சரிதான்!'

அவள் வண்டியில் ஏறி அமர்ந்தாள், நகரம் போய்ச் சேரும்வரை, அவள் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை.

ஓராண்டுக்குப் பின்னுல், அவள் சாதாரண விரதங்களை மேற்கொண்டு, ஒரு கன்னிகா மடத்தில் சேர்ந்து, கடுமையான சமய வாழ்வு வாழத் தொடங்கினுள். துறவி **ஆர்செனி** என்பவர் அவளுக்கு உபதேசம் செய்ததுடன் பின்னுலும் கடிதங்கள் எழுதி, அவளுக்கு ஆலோசனைகள் கூறி வந்தார்.

## VI

# புகழின் ஆரம்பம்

செர்கியஸ் பாதிரியார் தமது ஆசிரமத்தில் மேலும் ஏழு ஆண்டுகள் வசித்திருந்தார்.

ஆரம்பக் காலத்தில் அவர் தமக்காகக் கொண்டு வரப்பெற்ற பால், சர்க்கரை, தேயிலை, வெள்ளை ரொட்டி, உடைகள், விறகு ஆகிய பொருள்களில் பெரும்பாலான வற்றை உபயோகித்து வந்தார். ஆனல் காலம் செல்லச் செல்ல, அவர் கடுமையான விரதத்தை மேற்கொண்டு, பொருள்களின் உபயோகத்தை மிகவும் குறைத்துக் கொண்டார். தேவைகளை யெல்லாம் பூர்த்தி செய்து கொள்வதை அவர் நிறுத்திக் கொண்டார். வழக்கங்களை மாற்றிக் கொண்டார். இறுதியாக, கறுப்பு ரொட்டி மட்டும் உண்ண முற்பட்டார். அதிலும் வாரத்திற்கு ஒருமுறை மட்டும் கொஞ்சம் பெற்றுக் கொண்டார். அவருக்காக அளிக்கப் பெற்ற மற்ற பொருள்களை யெல் லாம் அவர் ஏழைகளுக்குக் கொடுத்து வந்தார்.

அவருடைய அறையிலிருந்து பிரார்த்தனை செய் வதிலும், வெளியிலிருந்து பார்க்க வருபவர்களுடன் பேசுவதிலும் அவருடைய காலம் கழிந்து கொண்டிருந் தது. தரிசனத்திற்காக வருபவர்களின் தொகையும் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வந்தது. வருடத்தில் இரண்டு மூன்று முறை மாதா கோயிலுக் குச் செல்வதற்காக அவர் அறையைவிட்டு வெளி யேறுவது வழக்கம்; கட்டை, தண்ணீர் தேவைப்படும் பொழுதும் அவர் வெளியே சென்று வருவார்.

இவ்வாறு ஐந்து ஆண்டுகள் கழிந்த பின்புதான், நள்ளிரவில், மகோவ்கினு என்ற மாது அவருடைய ஆசிரமத்திற்கு வந்திருந்தாள், அன்று முதல் அவள் வாழ்க்கையே மாறுதலடைந்து, அவள் கன்னிகா மடத்தில் சேரவும் நேர்ந்தது. இந்தச் செய்திகள் வெளியிலும் பரவியிருந்தன. இவைகளால் செர்கியஸ் பாதிரியாரின் புகழ் அதிகரித்தது. ஜனங்கள் கூட்டம் கூட்டமாக அவரைப் பார்க்க வந்தனர். அவருடைய அறையின் பக்கத்தில் துறவிகள் பலர் வந்து தங்கியிருந்தனர். அங்கே ஒரு மாதா கோயிலும், விடுதியும் விரைவிலே கட்டப் பெற்றன. பாதிரியாரின் பெருமையைப் பற்றி மக்கள், வழக்கம் போல், மிகைப்படுத்தியே பேசி வந்தனர். அந்தப் பெருமை நாளடைவில் சுற்றுப்புறங்களுக்கும் அப்பால் நெடுந்தூரத்திற்கும் பரவியிருந்தது. தொலைவிலுள்ள இடங்களிலிருந்தும் மக்கள் அவரைத் தேடி வந்தனர். அவர் பிணியாளரின் நோய்களையும், குணப்படுத்துகிறார் என்று கேள்விப்பட்டு, அவர்கள் நோயாளிகளையும், துயரப்படுவோர்களையும் அவரிடம் அழைத்து வந்தனர்.

முதன் முதலாக அவர் ஒரு நோயாளியைக் குணப்படுத்தியது அவர் ஆசிரமத்திற்கு வந்த எட்டாவது ஆண்டில் நிகழ்ந்தது. பதினாலு வயதுப் பையன் ஒருவன் அவனுடைய தாய் அவனை ஆசிரமத்திற்கு அழைத்து வந்து சாமியார் தம் கரங்களை அவன் மீது வைத்து வாழ்த்த வேண்டுமென்று வேண்டினாள். பிணியாளரைத் தாம் குணப்படுத்த முடியும் என்று செர்கியஸ் பாதிரியார் ஒரு போதும் கருதியதே யில்லை, அத்தகைய எண்ணமே பாவகரமானது என்று அவர் கருதியிருப்பார். ஆனால்

அந்தப் பையனுடைய தாய் அவரை விடுவதா யில்லை, அவள் கெஞ்சிக் கூத்தாடினாள். பையனைத் தொட்டருள வேண்டும் என்று கிறிஸ்துவின் பெயரைச் சொல்லி அவள் மன்றாடினாள். செர்கியஸ் ஆண்டவர் ஒருவரே குணப்படுத்த முடியும் என்று சொன்னதற்கு, அவள் அவர் தம் கையால் பையனைத் தீண்டிப் பிரார்த்தனை செய்தால் போதும் என்று வேண்டினாள். பாதிரியார் அவள் வேண்டுகோளை மறுத்து விட்டுத் தமது அறைக் குள்ளே போய்விட்டார். ஆனால் மறுநாள் அவர் தண்ணீர் எடுக்க வெளியே சென்ற பொழுது, (அது இலையுதிர் காலம், இரவெல்லாம் குளிராயிருந்தது) அவர் அந்த ஸ்திரீ தன் பையனுடன் வழியில் காத்திருப்பதைக் கண்டார். பதினான்கு வயதுப் பையன், அவன் மிகவும் மெலிந்திருந்தான். தாய் பாதிரியாரைக் கண்டதும், மீண்டும் கெஞ்சத் தொடங்கினாள், பழைய பல்லவி களையே பாடினாள். செர்கியஸுக்கு 'நேர்மையற்ற நீதிபதி'யின் கதை அப்பொழுது நினைவுக்கு வந்தது; அதுவரை அவர் அந்த ஸ்திரீயின் வேண்டுகோளை மறுப்பதுதான் உத்தமம் என்று கருதி வந்தது மாறி விட்டது; அவருக்குத் தாம் செய்தது சரிதானா என்று சந்தேகம் தோன்றியது. மனத்தில் ஒரு நிச்சய மில்லாத நிலையில், அவர் அறைக்குள் சென்று பிரார்த்தனை செய்தார், ஓர் உறுதி தோன்றும்வரை அவர் அப்படியே ஜபம் செய்து கொண்டிருந்தார். அந்தப் பெண் விரும் பியபடியே தாம் செய்ய வேண்டும் என்று அவர் முடிவு செய்தார்; அவளுடைய நம்பிக்கையே பையன் குண மடைய உதவக்கூடும் என்றும், இந்த விஷயத்தில் அவர் ஆண்டவரின் கருவியாக இருக்கவேண்டியதே முறை

என்றும் அவர் கருதினர். தாம் எவ்வளவு அற்பமான கருவியா யிருப்பினும், ஆண்டவர் தம்மைப் பயன் படுத்திக் கொள்ளட்டும் என்று துணிவு கொண்டார்.

செர்கியஸ் அறையைவிட்டு மீண்டும் வெளியே வந்து, அந்த மாதின் பக்கம் சென்றார். அவள் விரும்பிய படியே செய்தார். அவர், பையனின் தலைமேல் தம் கையை வைத்துக்கொண்டு, பிரார்த்தனை செய்தார்.

அன்னையும் மகனும் போய்விட்டனர். ஒரு மாதத்திற்குப் பின் பையன் உடல் நலமடைந்தான். செர்கியஸ் பாதிரியார் எந்த நோயையும் மந்திரத்தாலேயே குணப்படுத்துகிறார் என்ற செய்தி பல இடங்களிலும் பரவிவிட்டது. அவரைப் பெரிய முனிவர் என்று மக்கள் போற்றத் தலைப்பட்டனர். அதிலிருந்து வாரந் தவருமல் நோயாளரின் கூட்டங்கள் அவரை நாடி வந்து கொண்டிருந்தன. ஒருவருக்கு இணங்கிவிட்டதால், அவர் பின்னல் மற்றவர்களை மறுக்க முடியவில்லை. வந்த பிணியாளர்களின் மீது கையை வைத்துக்கொண்டு, அவர் பிரார்த்தனை செய்வது வழக்கமாகிவிட்டது; பலர் குணமடைந்தனர்; அவர் புகழ் மேலும் மேலும் பெருகிக்கொண்டிருந்தது.

இவ்வாறு ஆண்டுகள் உருண்டோடிக்கொண்டிருந்தன. துறவி மடங்களில் ஒன்பது ஆண்டுகளும், இந்த ஆசிரமத்தில் பதின்மூன்று ஆண்டுகளும் கழிந்துவிட்டன. செர்கியஸ் பாதிரியார் என்ருல், எல்லோரும் வணக்க ஒடுக்கத்துடன் மரியாதை செலுத்தும் புனிதராக அவர் ஆகிவிட்டார். அவருடைய தாடி நீண்டு, நரைத்து, வளர்ந்திருந்தது; ஆனல் தலை உரோமம் மெல்லியதாக மாறிய போதிலும், எப்பொழுதும் போல், கறுப்பாகவே யிருந்தது.

VII

## சாமியாரின் வீழ்ச்சி

**சில** வாரங்களாக செர்கியஸ் பாதிரியாரின் உள்ளத்தில் ஒரு சிந்தனை இடைவிடாமல் ஓடிக் கொண்டிருந்தது: அவர் இப்பொழுது செய்துவந்த காரியம் சரிதானா? அவர் தாமாக இதை மேற்கொள்ளா விட்டாலும், மேலேயுள்ள தலைவர் வந்த பிணியாளரைக் குணப்படுத்துவது நலமென்று கட்டளையிட்டிருந்தார். பதினான்கு வயதுப் பையனில் தொடங்கிய இந்த வேலை நீடித்து நடக்க வேண்டியதாகிவிட்டது. அது முதல் ஒவ்வொரு மாதமும், வாரமும், நாளும், அவருடைய ஆன்மிக வாழ்வு படிப்படியாகக் குலைந்து வருவதாக அவர் உணர்ந்தார். அத்துடன் வெளிப்படையான புற வாழ்க்கை மட்டும் வளர்ந்து பெருகிக் கொண்டிருந்தது. மொத்தத்தில் அவர் வாழ்வே தலைகீழாக மாறிவிட்டது போலத் தோன்றியது.

அவருடைய செயலால் ஏராளமான ஜனங்கள் ஆசிரமத்தை நாடி வந்தனர், மடத்திற்கு நிறைய நன் கொடைகளும் சேர்ந்து வந்தன. இந்தக் காரணங்களுக் காகவே மடாலயத்தின் அதிகாரிகள் அவர் பிணியாள ரைக் குணப்படுத்தி வருதல் நல்லது என்று கருதினர். அவர் மூலம் அடையக்கூடிய ஆதாயம் முழுவதையும் அடைய வேண்டும் என்பது அவர்கள் விருப்பம். ஆகவே அவர் உடல் வருந்தி எந்த வேலையும் செய்யும் படி அவர்கள் விடவில்லை. அவருக்குத் தேவையானவை கள் எல்லாம் கொண்டு வந்து கொடுக்கப்பெற்றன. அவர் செய்ய வேண்டிய வேலை ஒன்றுதான் இருந்தது:

அவரை நாடி வரும் மக்களை வரவேற்று, அவர்களுக்குத் தமது ஆசியை அளித்துவர வேண்டியது. அவருக்கு அதிக வசதி யிருப்பதற்காக, தரிசனத்திற்கு வருபவர்களைப் பார்ப்பதற்கென்று வாரத்தில் சில நாட்கள் ஒதுக்கி வைக்கப் பெற்றன. ஆடவர்கள் வந்து தரிசிப்பதற்காக ஒரு தனி அறை ஏற்பாடு செய்யப் பெற்றது; பெண்டிர் கூட்டமாக வந்து பார்க்கையில் அவருக்கு இடையூறில்லாமல் இருப்பதற்காக, அவர் அமரும் இடத்தைச் சுற்றிக் கம்பிகள் போடப்பெற்றன. மக்களுக்கு அவருடைய சேவை தேவையாயிருந்தது என்றும், கிறிஸ்துநாதரின் அருள் மார்க்கத்தின்படி அவர் அவர்களுக்கு உதவிபுரிய மறுப்பதற்கு உரிமையில்லை யென்றும், அது கொடுமையாகும் என்றும் அவருக்கு வற்புறுத்திச் சொல்லி வந்ததால், அவர் மேலதிகாரிகள் சொற்படி நடக்க வேண்டியதாயிற்று. இத்தகைய வாழ்க்கையில் அவர் மேலும் மேலும் ஈடுபட நேர்ந்ததால், அவருடைய ஏகாந்தமான ஆன்மிக வாழ்வு மாறி, படாடோபமான புறவாழ்வு அதிகரித்து வந்தது; தம்முள் ஜீவனுக்கு ஆதாரமான நீர் பெருகும் ஊற்றுக் கண் அடைக்கப்பட்டுவிட்டதாக அவர் உணர்ந்தார்; அவர் செய்து வந்ததெல்லாம் மனிதனுக்காகவே என்றும், ஆண்டவருக்காக அல்ல என்றும் அவர் தெரிந்துகொண்டார்.

மக்களுடன் பழகுவதில், அவர் அவர்களை உற்சாகப் படுத்துவதிலும், நோயாளருக்காகப் பிரார்த்தனை செய்வதிலும், சன்மார்க்க வாழ்வைத் தேடி வருபவர்களுக்கு உபதேசம் செய்வதிலும், அவரால் உடல் நலம் பெற்றவர்கள் நன்றி தெரிவிப்பதிலும், ஒழுக்கம்பற்றி அவர்

உரைகள் நிகழ்த்துவதிலும் அவருக்கு உள்ளூர மகிழ்ச்சி ஏற்பட்டு வந்தது; தம் முயற்சிகளின் பயன்கள் என்ன என்று தெரிந்து கொள்வதிலும் அவருக்கு விருப்பம் ஏற்பட்டது; பிறரிடம் தமது செல்வாக்கு எவ்வளவு ஏறியிருந்தது என்பதைக் கண்டு கொள்வதிலும் அவருக்கு இன்பம் தோன்றிற்று. அவர் தாம் ஒரு தீவட்டியைப் போல் எரிந்து கொண்டிருப்பதாக எண்ணினார்; இந்த எண்ணம் வலுவடையத் தொடங்கியதும், அவர் தம்முள்ளே ஆண்டவருடைய உண்மையின் ஒளி மங்கி வருவதாகக் கருதினார். அவர் தம் வேலைகளில் எந்த அளவுக்குக் கடவுளுக்குத் தொண்டு செய்துவந்தார், எந்த அளவுக்கு மனிதனுக்குச் செய்து வந்தார்?—இந்தக் கேள்வி அவரை இடைவிடாமல் வேதனை செய்து வந்தது. இதற்கு விடையை அவர் எளிதில் கண்டிருக்க முடியும், ஆனால் அந்த விடையை அவர் கவனித்துப் பார்க்கவே அஞ்சினார். அவர் தேவனுக்காகச் செய்துவந்த வேலை அனைத்திற்கும் பதிலாகச் சைத்தான் மனிதனுக்கு வேலை செய்யும்படி மாற்றியமைத்து விட்டான் என்பதை அவருடைய அந்தராத்மா உணராமலில்லை. இப்பொழுது அவர் தனிமையாயிருப்பது வேதனையாகத் தோன்றிற்று, முன்பு ஏகாந்தமாயில்லாவிட்டால் வேதனையாக இருந்தது. இப்பொழுது அவரைப் பார்க்க வருகிற ஜனக் கூட்டங்கள் அவருக்குக் களைப்பை உண்டாக்கின, எனினும் அவருடைய உள்ளத்தில் கூட்டங்களைக் கண்டு மகிழ்ச்சியே பெருகிற்று; தம்மைப்பற்றிச் சுற்றிலும் எங்கும் புகழ்ந்து பேசியதில் அவர் இன்பமடைந்து வந்தார். இவைகளிலிருந்து அவர் தம்

முந்தைய நிலையினின்றும் எவ்வளவு மாறியிருந்தார் என்பதை அவரும் உணர்ந்தார்.

எப்படியாவது இந்த நிலையிலிருந்து தப்பி வெளியேற வேண்டுமென்று அவர் ஒரு சமயம் நினைத்த துண்டு. அதற்காகத் தாம் என்னென்ன செய்ய வேண்டுமென்று திட்டம்கூட வகுத்திருந்தார். குடியான வர் வழக்கமாக அணியும் சட்டைகள், கால்சட்டை, தொப்பி முதலியவைகளை அவர் தயாரித்துத் தமது அறையில் வைத்திருந்தார். அவைகளை ஏழைகளுக்கு அளிக்கலாம் என்று தயாரித்திருப்பதாகக் கேட்டவர் களுக்கு அவர் பதில் கூறி வந்தார். அவைகளைத் தாமே அணிந்து, தலைமயிரை ஒட்டக் கத்தரித்துக்கொண்டு, இரயிலில் ஏறிச் சுமார் 200 மைல் சென்று, பிறகு கால்நடையாகக் கிராமம் 'கிராமமாகச் சுற்ற வேண்டு மென்று அவர் எண்ணியிருந்தார். அவரிடம் வந்த ஒரு பழைய சிப்பாயிடம், அவன் எப்படி ஊரூராகச் சென்று, உணவும், தங்கியிருக்க இடமும் பெற்று வந்தான் என்பதை அவர் கேட்டார். அவன் எங் கெங்கு உணவும் உறையுளும் கிடைக்கும் என்பதையும், இல்வாழ்வோரிடம் எப்படி யாசிக்க வேண்டும் என்பதை யும் அவருக்கு விவரமாகக் கூறினான். அவன் செய்துவந்த முறையிலேயே தாமும் செய்து கொள்ளலாம் என்று செர்கியஸ் பாதிரியார் கருதினார். ஓர் இரவில் அவர் தம்மிடம் இருந்த குடியானவர் உடைகளை எடுத்து அணிந்து கொண்டு, அன்றே வெளியேறிவிட வேண்டுமென்று எண்ணினார்; ஆனால் போவது நல்லதா, இருப்பது நல்லதா என்று அவருக்குத் திகைப்பு ஏற்பட்டுவிட்டது. சிறிது நேரம் அவர் ஒரு

முடிவுக்கும் வராமல், அப்படியே அமர்ந்திருந்தார். ஆனால் பின்னால் அவருடைய திகைப்பு மாறிவிட்டது. வழக்கமான தம் வாழ்க்கையை அவர் மீண்டும் மேற் கொண்டு விட்டார், இவ்வாறு சைத்தானுக்கு அவர் பணிய நேர்ந்தது. அவர் தயாரித்திருந்த உடைகள் பயனற்று அறையிலேயே கிடந்தன; ஆனால் அவை களைப் பார்க்கும் பொழுதெல்லாம், அவர் முன்பு ஒரு சமயம் அவைகளை அணிந்து கொண்டு வெளியேற எண்ணியது நினைவுக்கு வரும்.

நாளுக்கு நாள் மக்களின் எண்ணிக்கை பெருகி வந்தது, அந்த அளவுக்குப் பிரார்த்தனை செய்யவும், ஆன்மார்த்திகமாக தியானம் செய்யவும், அவருக் கிருந்த வாய்ப்பு குறைந்து வந்தது. சில சமயங் களில், அவர் நல்ல சிந்தனைகளோடு விளங்கும் பொழுது, முன்பு ஊற்று நீரால் நிரம்பியிருந்த சுனை, நீர்வற்றி, காய்ந்து கிடப்பதற்குத் தம்மை ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்வார்.

'இங்கே ஒரு சுனை இருந்தது, அமைதியான, ஜீவ நீர் நிரம்பிய சுனை; அந்த நீர் என்னுள்ளே மெல்லப் பாய்ந்து என் வழியாக வெளியேயும் பரந்து நின்றது. அதுதான் உண்மையான வாழ்க்கை. அப்பொழுதுதான் அவள் வந்து சேர்ந்தாள்'—அவளையும், அந்த இரவை யும்பற்றி நினைக்கும்பொழுதெல்லாம், அவர் உள்ளத்தில் உவகை நிறைந்திருந்தது: அவள் இப்பொழுது மடத்தில் அன்னை அக்னியா என்ற பெயருடன் விளங்கினாள்— 'எனக்கு ஆசைத் தூண்டுதலாக அவள் வந்தாள். வந்த வள் அந்த ஜீவ நீரைப் பருகினாள், பவித்திரமானாள். ஆனால் இப்பொழுது நீர் ஊறிச் சிறிது தேங்குவதற்கு

முன்பே, தாகத்தால் தவிப்பவர்கள் அதைப் பருகுவதற் காகக் கூட்டம் கூட்டமாக ஓடி வருகின்றனர், ஒருவரை யொருவர் இடித்துத் தள்ளுகின்றனர். அவர்கள் சுனை யில் இறங்கி ஊற்றுக் கண்களின்மீது சமட்டி மிதித்து அவைகள் தூர்ந்து போகும்படி செய்துவிட்டனர், இப் பொழுது நீரேயில்லை, களிமண் தான் இருக்கிறது.'

அவர் மனம் நல்ல நிலையிலிருக்கும்பொழுது அவர் இவ்வாறு எண்ணமிட்டார். ஆனால் மற்ற நேரங்களில், அவர் மிகவும் களைப்படைந்து, இருக்கும் நிலையையே பெருமையாக எண்ணிக் கொள்வது வழக்கமாயிருந்தது.

* * *

வசந்த காலம், பண்டிகை நடந்துகொண்டிருந்தது. செர்கியஸ் பாதிரியார் தமது குகைத் தேவாலயத்தில் பிரார்த்தனை நடத்திக்கொண் டிருந்தார். ஆலயத் துள்ளே சுமார் இருபது பேர்கள் குழுமியிருந்தனர், அந்த அளவுக்குமேல் அங்கு நிற்க இடமில்லை. அவர் கள் செல்வம் மிகுந்த கனவான்களும், வியாபாரிகளு மாவார்கள். பாதிரியார் எல்லோரையும் வரவேற்ற போதிலும், அவருக்கு ஊழியம் புரிந்துவந்த துறவியும், மடத்திலிருந்து தினந்தோறும் வந்துகொண்டிருந்த பணியாளும், ஜனங்களை வடிகட்டி, உள்ளே சிலரை அனுப்பிவிட்டு, மற்றவர்களை வெளியே நிறுத்திவிடுவார் கள். வெளியே சுமார் எண்பது யாத்திரீகர்கள் கூடி யிருந்தனர், அவர்களிற் பெரும்பாலோர் ஸ்திரீகள். கதவினடியில் அவர்கள் கூட்டமாக நின்று செர்கியஸ் பாதிரியார் வந்து தங்களுக்கு நல்லாசி கூறவேண்டு மென்பதற்காகக் காத்திருந்தனர்.

தேவ ஆராதனை நடந்துகொண்டிருந்தது. தோத்திரங்கள் பாடப்பெற்றன. செர்கியஸ் பாதிரியார் தமக்கு முன்னுல் அங்கிருந்த சாமியாரின் சமாதியருகில் செல்லும்பொழுது, உடல் ஆடி அவர் ஒரு பக்கமாகச் சாய்ந்துவிட்டார். அப்பொழுது அருகிலிருந்த ஒரு வணிகரும், துறவியும் அவரைப் பிடித்துக்கொள்ளாதிருந்தால், அவர் கீழே சாய்ந்திருப்பார்.

'என்ன விஷயம்? செர்கியஸ் சாமி! அன்புள்ளவரே!' என்று பெண்களின் குரல்கள் ஒலித்தன: 'ஆண்டவர்தாம் நம்மைக் காக்கவேண்டும்! உடலெல்லாம் வெளிறிப் போயிருக்கிறீர்களே, சாமி!'

ஆனுல் செர்கியஸ் உடனே தம்மைச் சமாளித்துக்கொண்டு, தம்மைப் பிடித்துக்கொண்டிருந்த வணிகரையும், துறவியையும் உதறிவிட்டு, மற்றவர்களோடு சேர்ந்து தோத்திரக் கீதத்தைப் பாடத் தொடங்கினுர். உதவிக்கு நின்ற குருவான செராபியன் என்பவரும், பணியாளர்களும், செர்கியஸ் பாதிரியாரை இடைவிடாமல் கவனித்து உதவிவந்த சொபியா என்ற ஸ்திரீயும் ஆராதனையை நிறுத்திவிடுமாறு அவரை மன்ருடிக் கேட்டுக்கொண்டனர்.

'ஒன்றுமில்லை, எனக்கு ஒன்றுமில்லை, ஆராதனையில் குறுக்கிடாதீர்கள்!' என்று செர்கியஸ் முணுமுணுத்துக்கொண்டே, புன்னகை புரிந்தார். அவருடைய சொற்கள் மீசைக்குள்ளிருந்து மெல்ல ஒலித்தன.

'அர்ச்சிய சிரேஷ்டர்களான முனிவர்களே இவ்வாறு ஏற்படும்படி செய்திருக்கவேண்டும்!' என்று அவர் தமக்குள் எண்ணிக்கொண்டார்.

அந்தநேரத்தில் செரபியா, 'முனிவரே, புனிதமான தேவதூதரே!' என்று பதறிக்கொண்டே கூவினாள். வணிகரும் நயந்து வேண்டிக்கொண்டார். ஆனால் சேர்கியஸ், எவர் சொல்லையும் காதில் போட்டுக்கொள்ளாமல், பாடிக்கொண்டேயிருந்தார். எல்லோரும் கூட்டமாக மறுபடி ஆலயத்திற்குள்ளே சென்றனர். அங்கே சேர்கியஸ் ஆராதனையைக் கொஞ்சம் சுருக்கி, அதை விரைவில் முடித்துக்கொண்டார்.

ஆராதனை முடிந்தவுடன் சேர்கியஸ் அங்கே குழுமியிருந்தவர்களை ஆசீர்வதித்துவிட்டு, வெளியே சென்று, மரத்தடியிலிருந்த ஒரு பெஞ்சில் சிறிதுநேரம் அமர்ந்திருக்கலாம் என்று போனார். அங்கே சிறிது காற்று வீசுமென்றும், தமக்கு ஓரளவு ஓய்விருக்குமென்றும் அவர் எண்ணம். ஆனால் அவர் தலை வெளியே தென்பட்டவுடன், காத்திருந்த ஜனங்கள் கூட்டமாகச் சென்று, அவரைச் சூழ்ந்துகொண்டனர், எல்லோரும் அவருடைய ஆசியை வேண்டினார்கள். சிலர் தங்களுக்கு ஆலோசனை சொல்லும்படி கேட்டார்கள். சிலர் தங்களுக்கு உதவி செய்யும்படி வேண்டினார்கள். அந்தக் கூட்டத்திலே பல மாதர்கள் இருந்தனர். அவர்கள் ஒவ்வொரு புண்ணியத் தலமாகச் சென்று, பல பாதிரிமார்களைக் கண்டு ஆசி பெற்று வந்தவர்கள். அவர்களைப் பற்றி சேர்கியஸுக்கும் தெரியும். அவர்கள் யாத்திரையே தொழிலாக உடையவர்கள். அவர்களுக்கு இதயங்களில் எவ்வித உணர்ச்சியும் கிடையாது. சமய வாழ்க்கையில் ஒட்டுப்பற்றே கிடையாது. மாமூலான வழக்கப்படி அவர்கள் தலயாத்திரை செய்பவர்கள்.

கூட்டத்திலே ஆடவர்களும் இருந்தார்கள். அவர்களில் அநேகர் பட்டாளத்தில் வேலைமுடிந்து திரும்பியவர்கள். சாதாரணமாக ஓரிடத்தில் தங்கி வாழ வகையில்லாமல் சுற்றிக்கொண்டிருந்தவர்கள். கூட்டத்திலே வயோதிகர்களும் இருந்தார்கள். அவர்கள் வறுமையுற்றவர்கள். பெரும்பாலும் குடிகாரர்கள். அவர்கள் வழியிலே கிடைக்கும் பிச்சையை ஏற்றுக்கொண்டு, ஒவ்வொரு மடமாகப் பாாத்துக்கொண்டே செல்பவர்கள். யாத்திரிகர்களில் குடியானவர்களும் இருந்தனர். அவர்களில் ஆண்களும் பெண்களும் ஒன்றும் அறியாதவர்கள்; உடல் நோயைத் தீர்த்துக்கொள்வதற்கும், இலௌகிக வாழ்வில் சாதாரணமான விஷயங்களைப்பற்றி ஆலோசனை கேட்கவும், ஒரு பெண்ணின் திருமணம், கிராமத்துக் கடையை வாடகைக்கு விடுதல், நிலம் வாங்குதல் போன்ற விஷயங்களைப்பற்றி முடிவுகேட்கவும், திருமணமாகாமலே குழந்தை பெற்றதற்காகப் பாவமன்னிப்புக் கோரவும், இவை போன்ற பல விஷயங்களுக்காகவும் அவர்கள் வந்திருந்தார்கள். இத்தகைய விஷயங்களெல்லாம் செர்கியஸுக்கு முன்னுலிருந்தே பழக்கமானவை. இவைகளில் அவருக்கு அக்கறையும் கிடையாது. இந்த மனிதர்கள் அவருக்குப் புதிதாகச் சொல்லப்போவது எதுவுமில்லை. அவர் இதயத்தில் சமய சம்பந்தமான உணர்ச்சி எதையும் உண்டாக்கப் போவதுமில்லை. இருந்தபோதிலும் அவர் இவர்களைப் பார்க்க விரும்பினுர். இவர்களுக்கு அவருடைய தரிசனமும், உபதேசமும், ஆசிகளும் தேவையாயிருந்தன. இந்தக் கூட்டத்தினுல் அவருக்குச் சங்கடம் ஏற்பட்டபோதிலும், இது அவருக்கு மகிழ்ச்சியளித்து வந்தது.

செர்பியன் சாமியார் கூட்டத்தினரை விலக்கி, செர்கியஸ் களைப்படைந்திருப்பதாகக் கூறினார். ஆனால் செர்கியஸ் ஜனங்கள் தம்மிடம் வரலாம் என்று தெரிவித்தார். 'அவர்களை (குழந்தைகளை) என்னிடம் வரவிடுங்கள் !' என்ற கிறிஸ்துவின் வாக்கியம் அப்பொழுது அவர் நினைவுக்கு வந்தது. உடனே தாம் செய்வது சரிதான் என்ற திருப்தியும் அவருக்கு ஏற்பட்டது.

அவர் எழுந்திருந்து, வேலிக் கம்பிகளின் அருகிலே போய் நின்று, கூட்டத்தினரைப் பார்த்து ஆசி கூறினார். அவர்கள் கேட்ட வினாக்களுக்கு மறுமொழி சொன்னார். அப்பொழுது அவருடைய குரல் நலிவடைந்திருந்தது. அதை அவரே உணர்ந்து இரக்கப்பட்டுக்கொண்டார். அவரால் எல்லோரையும் கண்டு பதில் சொல்ல இயலவில்லை. மீண்டும் அவர் கண்கள் இருண்டன. உடல் ஆட்டம் கண்டது. அவர் கம்பிகளைப் பலமாகப் பிடித்துக்கொண்டு அவைகளின் உதவியால் நின்றுகொண்டிருந்தார். மீண்டும் உதிரம் தலைக்கேறியது. முகம் முதலில் வெளிறிப்போய், பின்பு சிவந்துவிட்டது.

'நீங்கள் எல்லோரும் நாளைவரை காத்திருக்க வேண்டியதுதான் ! இன்று இதற்குமேல் என்னால் இயலாது !' என்று சொல்லி, அவர் எல்லோரையும் பொதுப்படையாக வாழ்த்திவிட்டு, மீண்டும் தம் பெஞ்சை நோக்கிச் சென்றார். முன்னால் அவரைப் பிடித்துத் தாங்கிய வணிகர், அப்பொழுதும் அவர் கையைப் பிடித்து அழைத்துச் சென்றார். செர்கியஸ் மெதுவாக ஆசனத்தில் அமர்ந்துகொண்டார்.

'சாமி, சாமி!' என்று கூட்டத்தினர் கூவிக்கொண்டிருந்தனர். 'சாமி! எங்களைக் கைவிடாதீர்கள்! எங்களுக்கு வேறு கதி கிடையாது, சாமி!'

செர்கியஸைப் பெஞ்சில் அமர்த்திவிட்டு, வணிகர் கூட்டத்தை விலக்குவதில் ஈடுபட்டார். பாதிரியாரின் செவிகளில் விழாதபடி அவர் மெல்லிய குரலில் பேசிய போதிலும், அவருடைய சொற்கள் கடுமையாயிருந்தன.

'போங்கள், போங்கள்! அவர்தாம் உங்களை வாழ்த்தி விட்டாரே! உங்களுக்கு இன்னும் என்ன வேண்டும்? போய்விடுங்கள்! அல்லது நான் வந்து உங்களை விரட்டவேண்டுமா?—வந்தால் விடமாட்டேன்! புறப்படுங்கள், புறப்படுங்கள்! அதோ நிற்கிற கிழவி, உனக்குத்தான் சொல்லுகிறேன், புறப்படு! இங்கே ஏன் தள்ளிக்கொண்டு வருகிருய்? இன்று இவ்வளவுதான். நாளைக்கு வாருங்கள். இன்று அவர் மிகவும் களைப்படைந்து போய்விட்டார்!'

கிழவி அப்பொழுதும் போகாமல், 'அவர் முகத்தைப் பார்க்கவேண்டும்! ஒரே ஒருமுறை அந்த இனிய முகத்தைத் தரிசிக்கவேண்டும்!' என்று கூவினுள்.

'எப்படிப் பார்க்க வேண்டும் என்று நான் சொல்லித் தரட்டுமா? ஏன் இப்படித் தள்ளிக்கொண்டு வருகிருய்?' என்று வணிகர் சீறினுர்.

செர்கியஸ், வணிகர் ஏதோ முரட்டுத்தனமாக நடந்துகொள்வதாக எண்ணி, தமக்கு உதவியாயிருந்த குருவை அனுப்பி ஜனங்களை விரட்டாமலிருக்கும்படி கவனிக்கச் சொன்னுர். வணிகர் எப்படியும் எல்லோரையும் விரட்டி விடுவார் என்பது அவருக்குத் தெரியும். அவருக்கும் ஓய்வு தேவையாயிருந்தது. எதற்கும் தமது

அன்பைக் காட்டுவதற்காகவே, அவர் உதவிக் குருவை அனுப்பி யிருந்தார்.

குரு சொன்னதைக் கேட்டு,வணிகர், 'நான் அவர் களை விரட்ட வில்லை. அவர்களுக்குப் புத்தி உண்டாகு மாறுதான் செய்துகொண்டிருக்கிறேன். அவர்கள் இஷ்டப்படி விட்டுவிட்டால், அவர்கள் மனிதனின் உயிரையே வாங்கிவிடுவார்கள். அவர்களுக்கு இதயம் கிடையாது. தங்களைத் தவிர வேறு யாருக்காக வும் அவர்கள் கவலைப்படமாட்டார்கள்' என்று சொல்லி விட்டு, மீண்டும் ஜனங்களைப் பார்த்து, 'போங்கள், போங்கள்! போய்விட்டு, நாளை வாருங்கள்!' என்று கத்திக்கொண்டிருந்தார்.

இறுதியில் அவர் எல்லோரையும் ஒருவாறு அங்கி ருந்து விரட்டிவிட்டார்.

அந்த வணிகர் இவ்வளவு சிரத்தை எடுத்துக் கொண்டதற்குக் காரணங்கள் என்னவென்றால், எல்லாம் முறையாக நடக்க வேண்டும் என்ற ஆசை ஒரு புறம், ஜனங்களை விரட்டுவதில் ஓர் உற்சாகம், இவற் றிற்கு மேலாக செர்கியஸின் உதவியும் அவருக்குத் தேவையா யிருந்தது. அவர் திருமணமாகி மனைவியை இழந்தவர்; அவருக்கு ஒரே ஒரு பெண் இருந்தாள். அவள் நோயுற்றிருந்ததால், அவளை எவருக்கும் திரு மணம் செய்துகொடுக்க வாய்ப்பில்லாமலிருந்தது. அவர் தம் மகளை செர்கியஸ் பாதிரியாரிடம் காட்டிக் குணப்படுத்துவதற்காகச் சுமார் ஆயிரம் மைல் பிரயா ணம் செய்து அங்கே வந்திருந்தார். இரண்டு ஆண்டு களாக அவர் எத்தனையோ வைத்தியங்களெல்லாம் செய்து பார்த்துவிட்டார். முதலில் பெரிய நகரத்தி

லுள்ள ஆஸ்பத்திரியில் சிகிச்சை செய்ய ஏற்பாடு செய்தார்; அதனுல் பயனில்லை. பிறகு நாட்டு வைத்தியம் செய்து பார்த்தார். அதில் சிறிது குணம் ஏற்பட்டது. அப்பால் மாஸ்கோ நகரில் ஒரு பெரிய டாக்டரிடம் கொண்டுபோய்க் காட்டினுர். அவர் ஏராளமான பணத்தைப் பறித்துக் கொண்டாரே தவிர, நோய் குறையவே யில்லை. பின்னுல் யாரோ ஒருவர் செர்கியஸ் பாதிரியார் குணமாக்குவார் என்று சொன்னதன் பேரில், அவர் மகளை அவரிடம் அழைத்து வந்திருந்தார். அவர் கூட்டத்தினரை யெல்லாம் அனுப்பிவிட்டு, பாதிரியார் பக்கம் சென்று, தரையில் முழந்தாளிட்டு விழுந்து வணங்கி உரக்கப் பேசலானுர்:

'முனிசிரேஷ்டரான சுவாமிகளே! என் மகளுக்குத் தாங்கள் ஆசி கூறவேண்டும். அவள் நோயால் வலி பொறுக்காமல் தவித்துக்கொண்டிருக்கிருள். இதுவே தங்கள் புனிதத் திருவடிகளில் அடியேன் செய்து கொள்ளும் விண்ணப்பம்!'

அவர் இரு கரங்களையும் குவித்து மீண்டும் வணங்கினுர்.

அவருடைய பேச்சும், வணக்கமும் எல்லாம் அச்சில் வார்த்தவை போலிருந்தன. தம்முடைய மகளுக்குச் சிகிச்சை செய்ய ஒரு தந்தை இப்படித்தான் பேச வேண்டும் என்று சட்டமும் வழக்கமும் விதித்திருந்தது போலத் தோன்றிற்று அவருடைய வேண்டுகோள். செர்கியஸ் அவரை எழுந்திருக்கும்படி சொல்லி, அவளுக்கு என்ன செய்கிறதென்று கேட்டார். வணிகர், தம் மகளுக்கு இருபத்திரண்டு வயது என்றும், இரண்டு ஆண்டுகளாக நோய்வாய்ப்பட்டிருக்கிருள் என்றும்,

அவளுடைய தாய் திடீரென்று இறந்த பின்பு, அவள் கடற் பறவைகளைப்போல் கீச்சுக் குரலில் கத்திக் கொண்டு, புத்தியை இழந்துவிட்டாள் என்றும், அதனால் ஆயிரம் மைல்களைக் கடந்து அவர் அவளை அங்கே அழைத்து வந்திருப்பதாயும், அவள் பக்கத்திலே விடுதியில் தங்கியிருப்பதாயும் சொன்னார். மேலும் அவள் பகலில் வெளியே வருவதில்லை என்றும், சூரிய வெளிச்சத்தைக் கண்டால் அவளுக்கு அச்சம் ஏற்படுகிறது என்றும், சூரியன் மறைந்த பிறகே அவள் வெளியில் வர முடியும் என்றும் அவர் தெரிவித்தார்.

'அப்படியானால், அவள் மிகவும் பலவீனமாகவா இருக்கிறாள்?' என்று செர்கியஸ் கேட்டார்.

'இல்லை, அதைப் பலவீனம் என்று சொல்ல முடியாது. அவளுடைய உடலில் சதைக்குக் குறைவில்லை. ஆனால் ஏதோ நரம்புக் கோளாறு என்று டாக்டர் சொன்னார். சுவாமி ஒரு வார்த்தை சொல்லிவிட்டால், நான் உடனே அவளை இங்கு அழைத்து வருகிறேன். சுவாமிதாம் ஒரு தந்தையின் இதயத்திற்கு ஆறுதலளிக்க வேண்டும். அவர் வமிசம் அழிந்துவிடாமல் காத்தருள வேண்டும். அவர் மகளைத் தங்களுடைய பிரார்த்தனையால் குணப்படுத்திக் கொடுக்க வேண்டும்!'

அவர் மறுபடி தரையில் விழுந்து வணங்கினார். செர்கியஸ் மீண்டும் அவரை எழுந்திருக்கச் சொல்லி விட்டு, தம்முடைய வேலைகள் எவ்வளவு கடினமாயிருந்தன என்று எண்ணிப் பெருமூச்சுவிட்டார். அப்படியிருந்தும், தாம் அடக்கமாக அவைகளை நிறைவேற்றி வருவதில் மகிழ்ச்சியே அடைந்தார். ஒரு கண நேரம் மௌனமாயிருந்துவிட்டு அவர், 'சரிதான்,

அவளை இன்று மாலை அழைத்து வாருங்கள்; அவளுக்காக நான் பிரார்த்தனை செய்கிறேன். இப்பொழுது நான் களைப்புற்றிருக்கிறேன்' என்றார்.—அவருடைய கண் இமைகள் மூடிக்கொண்டன: 'நான் சொல்லி யனுப்புகிறேன்.'

வணிகர் மணலில் மெதுவாகக் கால் வைத்து நடந்து சென்றார். எனினும் அவருடைய பூட்ஸுகள் கிறீச்சிட்டுக்கொண்டிருந்தன. செர்கியஸ் பாதிரியார் தனித்திருந்தார்.

சாமியாரின் வாழ்க்கையில் எல்லா நாட்களிலும் அவரைப் பார்க்க வந்த மக்கள் ஏராளமானவர்கள், இடையிடையே ஆராதனைகளையும் நடத்த வேண்டியிருந்தது. ஆயினும் அன்று மிகவும் கஷ்டமான நாளாயிருந்தது. காலையில் பெரிய அதிகாரி ஒருவர் விஜயம் செய்திருந்தார். அவருடன் நெடுநேரம் பேசிக்கொண்டிருக்க நேர்ந்தது. அதற்குப் பின் ஒரு சீமாட்டி தன் மகனை அழைத்து வந்திருந்தாள். அந்த இளைஞன் கல்லூரி ஆசிரியனா யிருந்தான். அவன் நாத்திகக் கொள்கையுள்ளவன். தாயோ சமயப் பற்று மிகுந்தவள்; செர்கியஸ் பாதிரியாரிடம் பக்தி மிகுந்தவள். அவள் மைந்தனை அழைத்து வந்து, அவர் அவனுக்கு நல்லுபதேசம் செய்ய வேண்டுமென்று வேண்டினாள். அவனிடம் பேசுவது மிகவும் கடினமா யிருந்தது. ஒரு பாதிரியாரிடம் விவாதம் செய்ய வேண்டி யிருந்தது பற்றி அந்த இளைஞன் தயக்கம்கொண்டிருந்தான். அதனால் அவர் சொன்னதற்கெல்லாம் அவன் சரியென்று தலையை ஆட்டிக்கொண்டிருந்தான். ஆனால் அந்தரங்கத்தில் அவன் தாம் சொல்வதை நம்பவில்லை

என்பதை அவர் உணர்ந்துகொண்டார். பலவீன மானவனுடைய கருத்துக்களை வல்லமையுள்ளவன் ‘சரி, சரி’ என்று ஏற்றுக் கொள்வது போலவே, அவன் நடித்துக்கொண்டிருந்தான். எனினும் பாதிரியார் அவனிடம் பேசி முடித்ததில், சந்தோஷமும், மன அமைதியும் கொண்டார். அந்த உரையாடலை இப் பொழுது எண்ணிப் பார்க்கக்கூட அவருக்கு வருத்தமா யிருந்தது.

அவருக்கு உதவியாயிருந்த பணியாள் அந்த நேரத்தில் அங்கு வந்து, ‘சாமி, உண்பதற்கு ஏதாவது?—’ என்று ஞாபகப் படுத்தினன்.

‘சரி, ஏதாவது கொண்டுவா!’

பணியாள் குகை வாயிலின் அருகே கட்டப் பெற் றிருந்த அறைக்குள் சென்றன். மறுபடி பாதிரியார் தனித்திருந்தார்.

அவர் தனிமையில் வாழ்ந்து, தம் வேலைகள் அனைத்தையும் தாமே செய்துகொண்டு, கறுப்பு ரொட்டியையும், நிவேதன ரொட்டித் துண்டையும் தவிர வேறு எதையும் உண்ணுமல் இருந்த காலம் கழிந்து வெகு நாளாகி விட்டது. அவர் தமது உடல் நலத்தில் அலட்சியமா யிருக்கக் கூடாது என்று முன்பு பலர் அவரிடம் வற்புறுத்தி யிருந்தனர். இப்பொழுது அவ ருக்கு நல்ல ரொட்டியும் உயர்ந்த உணவுகளும் அளிக்கப் பெற்று வந்தன. அவர் உண்டது சொற்பமாயினும், அது முன்னைவிட அதிகமாகும்; முன்னல் அவர் சாப்பிட வேண்டுமே என்று வெறுப்புடனும், பாவ உணர்ச்சியுடனும் உண்பது வழக்கம். ஆனல் இப் பொழுது உண்பதில் அவர் இன்பம் கொண்டிருந்தார்

அன்றும் அப்படித்தான்; கொஞ்சம் பாலில் வெந்த சோறும், வெள்ளை ரொட்டியில் பாதியும் உண்டுவிட்டு, அவர் தேநீர் பருகினார்.

பணியாள் போய்விட்டான். அவர் மரத்தடியில் பெஞ்சின்மேல் தனியே அமர்ந்திருந்தார்.

அது மே மாதத்து மாலை நேரம். அங்கிருந்த பல வகை மரங்களிலும் இலை, சுருட்டை யாறி, நன்ருகத் துளிர்த்திருந்தன. கொடிகளிலும் புதர்களிலும் மலர்ந் திருந்த மலர்கள் இன்னும் கீழே உதிரவில்லை. குயில் களைப் போன்ற பாடும் பறவைகளின் இசை கேட்டது. —ஒன்று அருகிலிருந்து பாடிற்று, இரண்டு, மூன்று ஆற்றின் கரையில், புதர்களிலிருந்து பாடின. ஆற்றி னருகே தொலைவில், வேலை முடிந்து திரும்பிக் கொண் டிருந்த தொழிலாளர் பாடிக்கொண் டிருந்ததும் காதில் பட்டது. வனங்களுக்கு அப்பால் மறைந்துகொண் டிருந்த கதிரவனின் சாய்ந்த ஒளிக் கிரணங்கள் அங் கிருந்த மரங்களின் இலைகள்மீது வீசிக்கொண் டிருந்த தால், எந்தப் பக்கம் பார்த்தாலும் மெல்லிய பச்சையாக விளங்கிற்று. ஒளி பரவாத இடங்கள் இருண்டிருந்தன. மே மாதத்து வண்டுகள் அங்குமிங்கும் பறந்து கொண்டிருந்தன.

மாலை உணவு அருந்திய பின் செர்கியஸ் தம் மனத்துள், 'தேவகுமாரரே, ஏசுகிறிஸ்துவே, எங்கள் மீது இரக்கம் கொள்ளும்!' என்று பிரார்த்தனை செய் தார். பிறகு தோத்திரக் கீதம் ஒன்றைப் பாடினார். அவர் பாடிக்கொண்டிருக்கையில், அருகில் நின்ற புதரிலிருந்து ஒரு குருவி பறந்து வந்து, அவர் முன்னால் மகிழ்ச்சியோடு தத்தித் தத்தி நடந்து

கொண்டிருந்து, பிறகு எதையோ கண்டு, அது பயந்து பறந்து போயிற்று. பாதிரியார் அடுத்தாற் போல் ஒரு பிரார்த்தனையை ஓதினர். அதில் அவர் உலகத்தைத் துறந்து விட்டதாகச்சொன்னர். அந்தப் பிரார்த்தனையை அவர் வேகமாக முணுமுணுத்தார். ஏனெனில் வணிகரையும். அவர் மகளேயும் அழைத்து வருவதற்கு ஆளனுப்ப வேண்டும் என்பது அவர் நினைவிலிருந்தது. அவளைப் பார்ப்பதில் அவருக்கு விருப்பம்தான். ஏனெனில் அவளைப் பார்ப்பதில் வழக்கமான தினசரி வேலைகளிலிருந்து ஒரு மாறுதல் ஏற்படும்; அவள் புதிதாக வருபவள்; அவளும், அவளுடைய தந்தையும் அவர் ஒரு முனிவரென்றும், அவர் பிரார்த்தனையை ஆண்டவர் கேட்டு அருள் புரிந்தாரென்றும் நம்பியிருந்தனர். அவரை முனிவரென்று சொல்பவர்களை அவர் கண்டித்து வந்த போதிலும், அவருடைய இதயத்தின் அடித்தலத்திலே அவர் தாம் உண்மையிலே ஒரு முனிவர் என்றே எண்ணியிருந்தார்.

வெறும் ஸ்டீபனயிருந்த தாம், இயற்கைக்கு அப்பாற்பட்ட அற்புதங்களைச் செய்யக்கூடிய முனிவராக மாறி விளங்கியதில், அவரே அடிக்கடி ஆச்சரியமடைந்தார். ஆனல் அவரிடம் அற்புத ஆற்றல் இருந்தது என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. அவரே தம் கண் முன்னல் கண்ட அற்புதங்களை நம்பாமல் எப்படியிருக்க முடியும்? நோயுற்று நலிந்திருந்த பையனில் தொடங்கி, இறுதியாகக் கண் தெரியாத ஒரு கிழவிக்குப் பார்வை உண்டானதுவரை அவருடைய பிரார்த்தனைக்குப் பலன் இருந்தது என்பதையே வற்புறுத்திக் காட்டின.

அவை ஆச்சரியமானவைதாம். ஆனால் உண்மையானவை. இப்பொழுது வரப்போகிற வணிகரின் மகள் விஷயத்திலும் அவருக்கு அக்கறை யிருந்தது. அவள் புதியவள், அவரிடம் நம்பிக்கை கொண்டவள்; அவளைக் குணப்படுத்தினால், அவருடைய ஆற்றல் மேலும் உறுதிப்படும், புகழும் அதிகரிக்கும் 'ஆயிரக் கணக்கான மைல்களைத் தாண்டி மக்கள் வந்துகொண்டிருக்கின்றனர். பத்திரிகைகள் நோய்கள் குணமாவதைப்பற்றி எழுதுகின்றன. சக்கரவர்த்தியும் இதை அறிவார். ஐரோப்பாவிலும் இச் செய்தி தெரிந்திருக்கிறது!' என்று அவர் தமக்குள்ளே எண்ணிக் கொண்டார். ஆனால் திடீரென்று அவர் தாமே தம்மைப் புகழ்ச்சியாக எண்ணுவது கேவலம் என்று உணர்ந்து, மீண்டும் இறைவனை நோக்கிப் பிரார்த்தனை செய்யத் தொடங்கினார்.

'கர்த்தரே, பரமண்டலத்தின் மன்னரே, ஆறுதலளிப்பவரே, உண்மையின் உயிரே, வாரும், எம்முன் வந்து தங்கும், எல்லாப் பாவத்தினின்றும் எங்களைப் பரிசுத்தமாக்கும், எங்கள் ஆவிகளை இரட்சித்துப் பெருமைப்படுத்தும்!' என்று அவர் பிரார்த்தனை செய்தார். இப்படி எத்தனையோ முறை தொழுதும், அவருடைய பிரார்த்தனைகள் யாவும் வீணாயின என்பதும் அவர் நினைவுக்கு வந்தது. அவர் பிரார்த்தனைகள் செய்வதால் மற்றவர்கள் குணமடைந்தனர்; ஆயினும் அவருடைய சொந்த விஷயத்தில், புகழின்மீது அவர் கொண்டிருந்த இழிவான ஆசையைக் களைவதற்குக் கூட ஆண்டவர் அருள் புரியவில்லை.

அந்த ஆசிரமத்திற்கு வந்த புதிதில், அவர் தமக்கு அன்பு, பணிவு, புலனடக்கம் ஆகியவைகளை அருளும்படி செய்த பிரார்த்தனைகள் அவர் நினைவுக்கு வந்தன. அந்தக் காலத்தில் அவருடைய பிரார்த்தனைகளைக் கவனித்து ஆண்டவர் அருள்புரிந்து வந்தார் என்று அவர் எண்ணியிருந்ததையும், அவர் தம் ஒழுக்கத்தைப் பேணிக் காத்து வந்ததையும், தமது விரல் ஒன்றை வெட்டித் தள்ளியதையும் அவர் நினைத்துப் பார்த்துக் கொண்டார். உடனே அவர் இடது கையை மேலே தூக்கி வெட்டுப்பட்ட விரலின் அடியில் தோல் சுருங்கி ஒட்டிக்கொண்டிருந்த இடத்தை முத்தமிட்டுக் கொண்டார். அந்த ஆண்டுகளிலெல்லாம் அவர் உண்மையிலேயே பணிவுடன் விளங்கியதையும், பாவகரமான ஆசைகளில் வெறுப்புக்கொண்டிருந்ததையும், தம்மிடம் வந்த ஒரு கிழவனுக்கு உதவி புரிந்ததையும், குடிகாரனாகிய ஒரு சிப்பாய் தம்மிடம் பணம் கேட்டு வந்ததையும் கடைசியாக அவள் வந்ததையும் அவர் இப்பொழுது எண்ணினார். சரிதான், ஆனால் இப்போதைய நிலைமை என்ன? அவர் தம்மையே சில கேள்விகள் கேட்டுக் கொண்டார்: செரபியாவிடம் அவருக்கு உண்மையில் அன்பிருந்ததா? செரபியன் பாதிரியாரை அவர் நேசித்தாரா? அன்று வந்து அவரைப் பார்த்த மக்கள் அனைவரிடமும் அவர் அன்பு கொண்டிருந்தாரா? காலையில் அவர் சந்தித்துப் பேசிய ஆசிரியனிடம் அவர் தம் அறிவுத் திறனையும், முன் படித்திருந்தவைகளை மறவாமல் இருப்பதையும் காட்டிக் கொண்டாரா, அல்லது உண்மையிலேயே அவன் மனத்தை மாற்ற முயன்றாரா? மக்கள் தம்மிடம் அன்பு செலுத்துவதில்

அவர் இன்பமடையத்தான் செய்தார். அது அவருக்கு அவசியமாயும் இருந்தது; ஆனால் அந்த அன்புக்குக் கைமாருக அவருடைய இதயத்தில் அவர்கள்பால் அன்பு சுரக்கவில்லை. அவருடைய இதயத்தில் இப்பொழுது அன்பில்லை, பணிவில்லை, இச்சையை அடக்கிக் கொள்ளும் திறனுமில்லை.

வணிகரின் மகளுக்கு வயது இருபத்திரண்டுதான் என்பதில் அவருக்கு மகிழ்ச்சியே ஏற்பட்டிருந்தது. அவள் பார்வைக்கு அழகாயிருந்தாளா என்று தெரிந்து கொள்ள அவர் ஆசைகொண்டிருந்தார். அவள் மிகவும் பலவீனமாயிருந்தாளா என்று அவர் விசாரித்ததில், அவருடைய உண்மையான நோக்கம் அவள் பெண்மைக்குரிய வனப்புக்களைப் பெற்றிருந்தாளா என்பதைத் தெரிந்துகொள்வதுதான்.

'நாம் இவ்வளவு தாழ்வாகவா விழுந்துவிட்டோம்?' என்று அவர் ஆச்சரியப்பட்டார். 'ஆண்டவரே, எனக்கு உதவிபுரியும், என்னைக் கைதூக்கிவிடும், என் இறைவரே, என் தெய்வமே!' என்று, அவர் இரு கைகளையும் கூப்பிக்கொண்டு பிரார்த்தனை செய்யத் தொடங்கினர். இசைப் பறவைகள் இன்பமாகப் பாடிக்கொண்டிருந்தன. ஒரு வண்டு ரீங்காரம் செய்துகொண்டே அவர் காதருகே பறந்து வந்து, அவர் கழுத்தின் பின்புறத்தில் ஊர்ந்தது. அவர் துணியை உதறி அதை வெளியேற்றினர்.

'ஆனல்—அவர் இருக்கிருரா? நான் பூட்டிய கதவையல்லவா தட்டிக்கொண்டிருக்கிறேன்? பூட்டும், வெளியே தெரியும்படி யல்லவா பூட்டியிருக்கிறது? இசை பாடும் பறவைகள், மே மாதத்து வண்டுகள்,

இயற்கை—இவை யெல்லாம் பூட்டு அல்லவா ? அந்த ஆசிரியன் சொன்னதே ஒரு வேளை சரியானதாக இருக்குமோ ?'—இவ்வாறு அவர் மனத்துள் ஐயம் எழலாயிற்று. உடனே அவர் உரக்கப் பிரார்த்தனை செய்யத் தொடங்கினர் ; அத்தகைய ஐயங்களெல்லாம் மறைந்து, சாந்தியும், நம்பிக்கையும் ஏற்படும்வரை அவர் நெடு நேரம் பிரார்த்தனை செய்தார். பிறகு அவர் தமது மணியை அடித்தார். அந்த ஓசை கேட்டுப் பணியாள் வந்தவுடன், வணிகரும் அவர் மகளும் தம்மைப் பார்க்க வரலாம் என்று அவர் சொன்னர்.

வணிகர் தமது மகளைக் கையைப் பிடித்து அழைத்து வந்தார். அவர் மகளை அறைக்குள்ளே அழைத்துச் சென்று விட்டுவிட்டு, உடனே வெளியே சென்றுவிட்டார்.

அந்தப் பெண் அழகான தலையும், நல்ல நிறமும் கொண்டவள், உடல் சற்று வெளிறியிருப்பினும் உருண்டு திரண்டிருந்தது. அவள் மிகவும் பயந்து பணியும் இயல்புடன் காணப்பட்டாள். அவளுடைய முகம் நடுக்கமுற்ற குழந்தையின் முகத்தைப் போலிருந்தது, உடல் மட்டும் வயதான ஸ்திரீயினுடையதைப் போலிருந்தது. அறையின் வாயிலிலிருந்த பெஞ்சின் மேல் செர்கியஸ் பாதிரியார் அமர்ந்திருந்தார். அந்தப் பெண் நடந்து சென்ற பொழுது, அவர் பக்கமாகச் சிறிது நிற்கையில், அவர் அவளை ஆசீர்வதித்தார். அப்பொழுது அவருடைய கண்கள் அவள் உடலைத் துருவிப் பார்த்ததை எண்ணி, அவரே அச்சமுற்றார். அவள் உள்ளே சென்று விட்டாள். வெளியே அவரை எதுவோ வலியுண்டாகும்படி கடித்துவிட்டது போல்

இருந்தது அவருடைய உணர்ச்சி. அவளுடைய முகத்தைப் பார்த்ததும், அவள் உணர்ச்சி மிகுந்தவள் என்றும், மன வலிமையற்றவள் என்றும் அவர் உணர்ந்து கொண்டார். அவர் எழுந்திருந்து அறைக்குள்ளே சென்றார். அங்கே அவள், அவர் வரவை எதிர்பார்த்து, ஒரு முக்காலியில் உட்கார்ந்திருந்தாள்.

அவர் உள்ளே வந்ததும், அவள் எழுந்து நின்றாள்.

'நான் வீட்டுக்குப் போக வேண்டும்,' என்று அவள் சொன்னாள்.

'பயப்படாதே, உனக்கு என்ன செய்கிறது என்று என்னிடம் சொல்லு!' எனறு அவர் பதிலாகக் கூறினார்.

'எல்லாமே எனக்கு வேதனையாகத்தான் இருக்கின்றன,' என்று அவள் சொன்னாள். உடனே அவள் முகம் புன்னகையால் ஒளிபெற்று விளங்கிற்று.

'உனக்கு உடம்பு குணமாகிவிடும். பிரார்த்தனை செய்!'

'பிரார்த்தனையால் என்ன பயன்? நான் எத்தனையோ முறை பிரார்த்தனை செய்தாயிற்று. ஒரு பயனுமில்லை!' என்று அவள் சொல்லும் பொழுதும், புன்னகை செய்துகொண்டிருந்தாள். 'நீங்கள் பிரார்த்தனை செய்து, உங்கள் கைகளை என் மேல் வைத்திருங்கள். நான் உங்களைப் பற்றிக் கனவு கண்டிருக்கிறேன்,' என்றும் அவள் பேசினாள்.

'நீ என்ன கனவு கண்டாய்?'

'நீங்கள் உங்கள் கையை என் மார்பில் இப்படி வைத்ததாகக் கனவு கண்டேன்—இதோ இங்கே!' என்று சொல்லிக்கொண்டே அவள் அவருடைய கையைப்

பிடித்துத் தன் மார்போடு சேர்த்து அழுத்திக்கொண்டாள்.

அவருடைய வலது கை அவள் கையிலிருந்தது.

அவர், தலையிலிருந்து கால்வரை நடுங்கிக் கொண்டே, 'உன் பெயர் என்ன?' என்று கேட்டார். அவர் தாம் தோற்றுவிட்டதை உணர்ந்துகொண்டார். ஆசை அடக்க முடியாத அளவுக்கு முற்றிவிட்டது.

'மேரியா. பெயர் எதற்கு?'

அவள் அவருடைய கையை எடுத்து முத்தமிட்டாள். பிறகு தன் கையால் அவரை வளைத்துப் பிடித்துத் தன் அருகில் இழுத்துக்கொண்டாள்.

'நீ என்ன செய்துகொண்டிருக்கிறாய்? மேரியா! நீ ஒரு சாத்தான்!' என்று அவர் சொன்னார்.

'ஆ, சரிதான், இதில் ஒன்றும் பெரிய தீமை வந்து விடாது!'

அவரைத் தழுவிய வண்ணமே, அவள் பெஞ்சில் போய் அமர்ந்துகொண்டு, அவரை இழுத்து அருகே படுக்க வைத்தாள்.

* * *

பொழுது புலர்ந்ததும், அவர் முன் வாயிலுக்குச் சென்றார்.

இவையெல்லாம் உண்மையாக நடந்தவையா? விரைவில் அவளுடைய தந்தை வருவார். அவள் சாத்தான். என்ன செய்வது? இனி என்ன செய்யலாம்? ஆகா! முன்பு அவர் விரலை வெட்டிக்கொண்ட கோடரி அதோ கிடக்கின்றது! அவர் அதை எடுத்துக்கொண்டு தம் அறைக்குள் நுழைந்தார்.

அவருடைய பணியாள் ஓடிவந்தான்.

'விறகு வேண்டுமா? கோடரியை என்னிடம் கொடுங்கள்,' என்ருன்.

அவர், கோடரியை அவனிடம் கொடுத்துவிட்டு, அறைக்குள்ளே நடந்து சென்ருர். அவள் அங்கே படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தாள். அவளைப் பார்க்கவே அவருக்குப் பயங்கரமா யிருந்தது. பிறகு அவர் அறையின் பின் பக்கம் சென்று, அங்கே தொங்கிக் கொண்டிருந்த குடியானவன் உடைகளை எடுத்து அணிந்து கொண்டார். ஒரு கத்திரியை எடுத்து அவர் தம் தலைமயிரகைக் கத்தரித்துக்கொண்டார்; அப்படியே வெளியே சென்று நதிக்குச் செல்லும் பாதை வழியாக நடக்கலானுர். அவர் அந்தப் பக்கம் சென்று நான்கு ஆண்டுகளாகி யிருந்தன.

ஆற்றின் கரையை ஒட்டி ஒரு சாலை சென்று கொண்டிருந்தது. அவர் மதியம்வரை அந்தச் சாலை வழியாக நடந்து சென்ருர். மதியத்தில் அவர் கம்புத் தோட்டத்தில் இறங்கி, கம்புத் தட்டைகளின் நடுவில் படுத்துக்கொண்டார். மாலை நேரத்தில் அவர் ஒரு கிராமத்தின் அருகே போய்ச் சேர்ந்தார். ஆனுல் அதற்குள்ளே செல்லாமல், செங்குத்தான ஆற்றின் கரைப் பக்கமாகப் போனுர்.

வைகறை நேரம், கதிரவன் உதிக்க அரை மணி நேரம் இருக்கலாம். எல்லாப் பொருள்களும் மங்கலாகவும், இருள் சூழ்ந்தும் கிடந்தன: மேல் திசையிலிருந்து ஈரவாடை வீசிற்று. ஆம், விஷயத்தை முடிவு செய்து விடவேண்டும் என்று அவருக்குத் தோன்றிற்று. கடவுளே இல்லை. எப்படி முடிவு செய்வது? தண்ணீரில் குதித்துவிடலாமா? ஆனுல் அவருக்கு நீந்தத் தெரி

யும், நீருள் ஆழ்ந்துவிட முடியாது. தூக்கு ? அரைக் கச்சைக் கழுத்தில் கட்டிக்கொண்டு—ஒரு மரத்தில் ? மரணம் அவ்வளவு விரைவிலே, அவ்வளவு எளிதிலே, வந்துவிடும் என்று அவருக்குத் தோன்றிற்று. மரணம் சமீபித்துவிட்டது என்று நினைத்தவுடன், அவர் திகி லடைந்தார். மனத் தளர்ச்சியுள்ள நேரங்களில் முன்பு தொழுததுபோல், அப்பொழுதும் செய்ய விரும்பினர். ஆனால் யாரைத் தொழுவது ? கடவுள் இல்லை. அவர் கையால் தலையை ஏந்திக்கொண்டு அங்கேயே படுத் திருந்தார். திடீரென்று நன்ருய்த் தூங்கவேண்டு மென்று அவருக்குத் தோன்றிற்று. ஆகையால் கையை நீட்டித் தலையை அதன்மேல் வைத்துப் படுத்துக் கொண்டார், உடனேயே அவர் தூங்கிவிட்டார். இந்தத் தூக்கம் ஒருகண நேரம்தான் இருந்தது. அவர் மீண்டும் விழிப்படைந்தார். அவர் உள்ளத்தில் பழைய நினைவுக ளெல்லாம் தோன்றத் தொடங்கின. அல்லது அவர் கனவுதான் கண்டுகொண் டிருந்தாரோ, என்னவோ!

சிறுவயதிலே, அவர் குழந்தைப் பருவத்திலே நிகழ்ந்த சம்பவம் ஒன்று அவருடைய நினைவுக்கு வந் தது. அப்பொழுது அவர் கிராமத்தில் தமது தாயின் இல்லத்தில் வசித்திருந்தார். ஒருநாள் அந்த வீட்டு வாயிலில் ஒரு குதிரை வண்டி வந்து நின்றது. நிகோ லாய் மாமாவும், பாஷெங்கா என்ற சிறுமியும் அதி லிருந்து இறங்கிவந்தனர். மாமாவின் தாடி கறுப்பாக வும், அடர்த்தியாகவும், மண் வெட்டிபோல் படர்ந்தும் தொங்கிக்கொண்டிருந்தது. பாஷெங்கா ஒட்டி உலர்ந்த உடலுடன், மிகுந்த கூச்சத்தோடு இருந்தாள். அவளுடைய சிறிய முகம் இரங்கத் தக்கதாக இருந்தது.

அவள் மற்ற பிள்ளைகளுடன் விளையாடிக்கொண் டிருப்ப தற்காக அறைக்குள் கொண்டுபோய் விடப்பெற்றாள். அவரும், பிள்ளைகளும் அவளைப் பரிகாசம் செய்து கொண்டிருந்தனர். அவர்கள் அவளுக்கு நீந்தத் தெரியுமா என்று கேட்டனர். உடனே அவள், தரையில் கவிழ்ந்து படுத்துக்கொண்டு, கைகளையும் கால்களையும் ஆட்டி, நீந்தும் முறையைச் செய்து காட்டினாள். எல்லோரும் சிரித்து மகிழ்ந்தனர். அவளை ஒரு முட்டாள் என்று அவர்கள் எண்ணிக்கொண்டார்கள். அவர்களுடைய எண்ணத்தை அவளும் தெரிந்துகொண்டு, மிகவும் வருந்தினாள். அவள் அடைந்த வெட்கத்திற்கு அளவில்லை. அப்பொழுது அவள் முகத்தை வலித்து, உதடுகளைக் கோணலாக வைத்துக்கொண்டு புன்னகை செய்ததை அவர் ஒரு காலத்திலும் மறக்க முடியவில்லை.

பின்னால், அவள் பெரியவளாயிருந்த சமயத்திலும், அவர் அவளை ஒருமுறை பார்த்திருந்தார். பல ஆண்டுகளுக்குப் பிறகு, அவர் துறவிகள் மடத்தில் சேருவதற்குச் சற்று முன்னால், அவளைச் சந்திக்க நேர்ந்தது. அப்பொழுது அவளுக்கு விவாகமாகி யிருந்தது. அவளுடைய கணவன் கிராமத்தில் ஒருவிவசாயி. அவன் அவளுடைய செல்வத்தை யெல்லாம் விரயம் செய்து விட்டு, அவளையும் அடித்து வந்தான். அவளுக்கு ஒரு பையனும், பெண்ணும் ஆக இரண்டு குழந்தைகள் இருந்தனர். ஆனால் பையன் இளமையிலேயே இறந்து போய்விட்டான்.

அந்தக் காலத்தில் அவள் துக்கத்தோடு இருந்த நிலையில், அவளைப் பார்த்தது செர்கியஸுக்கு நினைவுக்கு வந்தது. பின்னால் மடத்திற்கும் அவள் ஒருசமயம் வந்

திருந்தாள். அப்பொழுது அவள் விதவையா யிருந்தாள். குழந்தைப் பருவம் முதல், ஒரு ஸ்திரீயாக வளர்ந்த பின்னும், அவள் ஒரே நிலையில் இருந்ததாகத் தோன்றிற்று. அவள் முட்டாளாக இருக்கவில்லை. ஆயினும் யாதொரு கவர்ச்சியுமில்லாமல், பேதையாகவும், பரிதாபப்படத் தக்கவளாகவும் விளங்கினாள். அவள் மடத்திற்கு வந்திருந்த சமயத்தில், அவளுடைய மகளையும், மகளை மணம்செய்து கொடுக்க நிச்சயித்திருந்த பையனையும் அழைத்து வந்திருந்தாள். அவர்கள் மிகவும் ஏழைமையான நிலையிலிருந்தனர். அவர்கள் பின்னால் ஏதோ ஒரு சிறு நகரத்தில் வாழ்ந்து வருவதாகவும் அவர் கேள்விப்பட்டார்.

அந்த ஸ்திரீயைப்பற்றி அவர் ஏன் இப்பொழுது இடைவிடாமல் நினைத்துக்கொண்டே யிருந்தார் என்பது அவருக்கே வியப்பா யிருந்தது. ஆனால் அவர் அவளைப்பற்றி நினைக்காமலிருக்க முடியவில்லை. அவள் இப்பொழுது எங்கே யிருக்கிறாள்? அவள் நிலைமை என்ன? முன்னால் தரையில் படுத்துக்கொண்டு நீந்திய சமயத்தில் துக்கத்தோடு வருந்தியது போன்ற நிலையிலேயே அவள் இன்னும் வருந்திக்கொண்டே இருக்கிறாளா? ஆ, அவளைப்பற்றி ஏன் நினைக்கவேண்டும்? அவருக்குத் தாம் செய்ய நினைத்தது இடையில் மறந்து போய்விட்டது! எல்லாவற்றையும் ஒரு முடிவுக்குக் கொண்டுவர வேண்டுமென்று அவர் விரும்பினார்.

ஆனால் மறுபடி அச்சம் அவரை ஆட்கொண்டது. நடக்கவேண்டிய காரியத்திலிருந்து தப்பித்துக்கொள்வதற்காக அவர் மீண்டும் பாஷெங்காவைப்பற்றிச் சிந்தனை செய்யத் தொடங்கினார்.

இவ்வாறு, ஒருசமயம் தம் உயிரை மாய்த்துக் கொள்வதுபற்றிச் சிந்தித்துக் கொண்டும், மறுசமயம் பாஷெங்காவைப்பற்றி எண்ணிக்கொண்டும் அவர் படுத்திருந்தார். அவளைப்பற்றிய சிந்தனை அவருக்குச் சிக்கலை விடுவிக்கும் வழியாகத் தோன்றிற்று. முடிவில், அவர் தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டார். உறக்கத்தின் நடுவில் அவர் ஒரு கனவு கண்டார். அதில், தேவதூதர் ஒருவர் வந்து, 'நேராகப் பாஷெங்காவிடம் சென்று, நீ என்ன செய்யவேண்டும் என்பதையும், நீ எதில் பாவம் செய்தாய் என்பதையும், எதில் உனக்கு விமோசனம் கிடைக்கும் என்பதையும் அவளிடம் கற்றுக் கொள்!' என்று சொன்னார்.

அவர் துயிலெழுந்தவுடன், அந்தக் கனவு ஆண்டவன் அருளால் ஏற்பட்ட ஒரு தோற்றம் என்று தீர்மானித்து, அதன்படி நடப்பதே தம் கடமை என்று மகிழ்ச்சியோடு முடிவு செய்தார். அவள் வசித்துவந்த நகரமும் அவருக்குத் தெரியும். அது சுமார் இருநூறு மைல் தொலைவிலிருந்தது. அந்த நகரத்தை நாடி அவர் புறப்பட்டார்.

# VIII

## பாஷெங்காவின் பண்பு

**பா**ஷெங்கா குழந்தைப் பருவத்தின் நிலையிலிருந்து முற்றிலும் மாறியிருந்தாள். அவள் பெயரே **பிரஸ்கோவியா** என்று மாறிவிட்டது. இப்பொழுது அவள் தோல் வற்றிச் சுருக்கு விழுந்து, மெலிந்த கிழவியா யிருந்தாள். அவளுடைய மருமகன் மவ்ரிகியேவ் ஒரு குடிகாரன். அரசாங்கக் காரியாலயம் ஒன்றில் குமஸ்தாவாக இருந்தான். அவன் கடைசியாக வேலை பார்த்துவந்த நகரத்திலேயே பிரஸ்கோவியா குடும்பத்துடன் தங்கியிருந்தாள். ஒரு மகள், நோயுற்று நலிந்திருந்த மருமகன், ஐந்து பேரர், பேத்திகள் ஆகியோரை அவளே காப்பாற்றி வந்தாள். சில வியாபாரிகளின் பெண்களுக்கு இசைப் பயிற்சி அளித்து வந்ததில், அவளுக்கு மாதத்திற்குச் சுமார் அறுபது ரூபிள்* வரை கிடைத்து வந்தது. மருமகனுக்கு வேறு புது இடத்தில் வேலை கிடைக்கும்வரை, அவள் தன் வருமானத்தைக் கொண்டே எல்லோருக்கும் உணவளிக்க வேண்டியிருந்தது. அவள் தன் உறவினர்கள், தனக்குத் தெரிந்தவர்கள் ஆகிய எல்லோருக்கும் கடிதங்கள் எழுதி, அவர்கள் தன் மருமகனுக்கு ஒரு வேலை தேடித் தரும்படி கேட்டுக்கொண்டிருந்தாள். செர்கியஸுக்கும் அவள் எழுதியிருந்தாள். ஆனால் அவளுடைய கடிதம் வருமுன்பே, அவர் ஆசிரமத்தைவிட்டு வெளியேறி விட்டார்.

அன்று சனிக்கிழமை, பிரஸ்கோவியா ரொட்டிக்கு

---

* ஒரு ரூபிள் சுமார் ஒன்றரை ரூபாய் மதிப்புள்ள வெள்ளி நாணயம்.

மாவு பிசைந்துகொண்டிருந்தாள். மறுநாள் ஞாயிற்றுக் கிழமைக்காகக் குழந்தைகளுக்கு இனிப்பு ரொட்டி தயாரிக்கவேண்டுமென்று அவள் அந்த வேலையில் ஈடுபட்டிருந்தாள். முந்திரிப் பழங்களைக் கலந்து இனிப்பு ரொட்டி சுடுவதை முன்பு அவளுடைய தகப்பனுர் வீட்டில் வேலை பார்த்துவந்த ஓர் அடிமை வேலைக்காரனிடம் அவள் கற்றிருந்தாள்.

அவளுடைய மகள் மாஷா கைக் குழந்தையுடன் உள்ளே யிருந்தாள். குழந்தைகளில் மூத்தவனை பையனும், ஒரு பெண்ணும் பள்ளிக்கூடம் போயிருந்தனர். மருமகன், முந்திய இரவில் தூக்கமில்லாததால், கிறங்கித் தூங்கிக்கொண் டிருந்தான். பிரஸ்கோவியாவுக்கும் அந்த இரவில் தூக்கமில்லை. அவள் தன் மருமகன் சம்பந்தமாக மகள் கொண்டிருந்த கோபத்தைச் சாந்தப்படுத்துவதில் இரவில் நெடுநேரம் கழிந்து விட்டது.

அவன் மிகவும் பலவீனமானவன். தன் பேச்சையோ, வாழ்க்கை முறையையோ மாற்றிக்கொள்ளும் ஆற்றல் அவனுக்கில்லை. மனைவி கடிந்து பேசுவதால் ஒரு பலனும் ஏற்படாதென்று பிரஸ்கோவியா உணர்ந்திருந்தாள். அவர்களுக்குள் பூசல் முற்ருமலும், ஏச்சும் பேச்சும் வளராமலும், அவளால் இயன்றவரை தடுத்து வந்தாள். வெறுப்பும், துவேஷமும் வளர்வதை அவள் விரும்பவில்லை. மனிதர்களிடையே அன்பில்லாமல் போகும்பொழுது, அவள் மிகவும் வருத்தப்படுவது அவளுக்கு இயல்பாகி விட்டது. வெறுப்பைக் கண்டாலே, அவள் உடலில் வலியுண்டாவது போலிருக்கும். அதனுல் ஒரு நன்மையும் உண்டாகாது என்றும், இருக்கிற

நிலைமையையும் அது சீர்கெடுக்கும் என்றும் அவள் தெளிவாக உணர்ந்திருந்தாள். அவள் ஆற அமர உட்கார்ந்து இதையெல்லாம் சிந்தனை செய்து முடிவுக்கு வந்ததாகச் சொல்ல முடியாது. அதற்கு அவளுக்கு நேரம் கிடையாது. உள்ளத்தின் பகைமையைக் கண்டால், அது அவளுக்கு ஒரு துர்நாற்றம் போலவோ, கடூரமான ஓசை போலவோ, அல்லது உடல்மீது விழும் அடி போலவோ தோன்றும்.

அவள் அங்கிருந்த வேலைக்காரப் பெண்ணிடம் மாவு பிசையும் முறையைப்பற்றிப் பெருமையுடன் பேசிக்கொண் டிருந்தாள். அப்பொழுது அவளுடைய பேரன் **மிஷா** உள்ளே ஓடிவந்தான். அவனுக்கு ஆறு வயதிருக்கும். அவன் ஒரே சட்டை அணிந்திருந்தான். குச்சிகள் போல் மெலிந்திருந்த அவன் கால்களிலிருந்த உறைகள் பலமுறை தைக்கப்பட்டவை. அவன் உள்ளே வரும்பொழுது, அவனுடைய முகம் பயத்தால் சிவந்திருந்தது.

'பாட்டீ, பாட்டீ! உன்னைத் தேடிப் பயங்கரமான கிழவர் ஒருவர் வந்திருக்கிறார்?' என்று அவன் சொன்னான்.

பணிப்பெண் லுகிரியா கதவுப் பக்கம் சென்று பார்த்தாள்.

'ஆம், அம்மா! யாரோ யாத்திரிகர்!' என்று அவள் சொன்னாள்.

பிரஸ்கோவியா கைகளில் ஒட்டியிருந்த மாவை உதறி, இடுப்பில் சுற்றியிருந்த துணியில் துடைத்துக் கொண்டு, சமையலறையை விட்டு வெளியேற எண்ணினாள். அவள் உள்ளே சென்று தன் பையிலிருந்து

ஐத்து காசு* எடுத்து வர விரும்பினுள்; ஆனால் பத்துக் காசுக்குக் குறைந்த நாணயமே அதிலில்லை என்று அவளுக்கு நினைவு வந்தது. எனவே காசுக்குப் பதிலாக, வாசலில் வந்துள்ள சாமியாருக்கு ரொட்டியைக் கொடுத்தனுப்பலாம் என்று, அலமாரியின் பக்கம் திரும்பினுள். அப்பொழுது அவளுக்கே வெட்கமாயிருந்தது. வீடு தேடி வந்த ஒரு யாத்திரிகருக்குப் பணம் கொடுக்கத் தனக்கு மனம் வரவில்லையே என்று அவள் வருந்தினுள். லுகிரியாவை அழைத்து, பெரிய ரொட்டித் துண்டு ஒன்றை நறுக்கி வரும்படி சொல்லிவிட்டு, அவள் காசை எடுக்க உள்ளே சென்ருள். ரொட்டியும் பத்துக் காசும் சேர்த்துக் கொடுக்கலாம் என்று அவள் கருதினுள். அப்படிக் கொடுத்தால்தான் அவளுடைய கருமித்தனம் ஒழிந்ததாகும்.

ரொட்டியையும் காசையும் கொடுக்கும் பொழுது, அவள் சாமியாரிடம் மன்னிப்பு வேண்டினுள். தருமம் கொடுப்பதில் செருக்கில்லாமல், அவள் மிகுந்த பணிவுடன் காணப்பட்டாள். அவருடைய கம்பீரமான தோற்றத்தைக் கண்ட பிறகு, அவள் தான் கொடுத்தது மிகவும் அற்பம் என்று எண்ணி, வெட்க மடைந்தாள்.

கிறிஸ்துநாதரின் பெயரால் பிச்சை யெடுத்துக் கொண்டு, அவர் இருநூறு மைல் தாண்டி வந்திருந்தார். அவர் உடல் மெலிந்து ஒல்லியா யிருந்தார். உடைகளில் புழுதி படர்ந்திருந்தது. அவர் தலையும் ஒட்டக் கத்தரிக்கப்பட்டிருந்தது. குடியானவர் அணியும் தொப்பியையும், ஜோடுகளையும் அவர் அணிந்திருந்தார்.

*ரஷ்யக் காசுக்குக் கோபெக் என்று பெயர். ஒரு கோபெக், சுமார் காலணு மதிப்புள்ளது.

இத்தனை இருந்தும், தலைவாயிலில் அவர் மிகவும் தாழ்ந்து பணிந்த போதிலும், செர்கியஸ் பார்வைக்குக் கம்பீரமாகவே யிருந்தார். யாவரையும் தம்மிடம் இழுத்துக்கொள்ளும் கவர்ச்சியும் அவரிடமிருந்தது. ஆனால் பிரஸ்கோவியா அவரை அடையாளம் தெரிந்துகொள்ளவில்லை. முப்பது ஆண்டுகளாக அவரைப் பாராததால், அவள் அவரைத் தெரிந்துகொள்ள முடியாததும் இயற்கைதான்.

'சாமி, மன்னியுங்கள்! பசியா யிருக்கிறீர்கள் போலிருக்கிறது!'

அவர் ரொட்டியையும் காசையும் ஏற்றுக்கொண்டார். ஆனால் அவர் அகன்று செல்லவில்லை. அங்கேயே நின்று, அவளைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

'பாஷெங்கா, உன்னைத்தான் நான் நாடி வந்திருக்கிறேன்! என்னை வெளியே அனுப்பிவிடாதே!'

அவள் கண்களையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த அவருடைய அழகிய கரிய கண்களில் நீர் தேங்கி நின்றது. நரைத்துக்கொண்டிருந்த மீசையின் அடியில், அவருடைய உதடுகள் துடித்துக்கொண்டிருந்தன.

பிரஸ்கோவியா, திறந்த வாயுடன், கையை நெஞ்சின் மேல் வைத்துக்கொண்டு, அவர் முகத்தை உன்னிப்பாய்க் கவனித்தாள்.

'இப்படியும் இருக்குமா—இராது! ஸ்டீபனா? செர்கியஸ்! செர்கியஸ் பாதிரியாரா?'

செர்கியஸ், மிகவும் தீனமான குரலில், 'ஆம்,—ஆனால் செர்கியஸ் அல்ல, செர்கியஸ் பாதிரியாரும் அல்ல—மகா பாவியான வெறும் ஸ்டீபன்தான்—

திக்கற்ற பாவியாகிய நான்தான் வந்திருக்கிறேன். என்னை ஆதரி. என்னை விரட்டிவிடாதே!'

'இப்படியும் இருக்குமா? எவ்வளவு பணிவுடன் மாறிப் போயிருக்கிறீர்கள்? ஆ, வாருங்கள் உள்ளே, வாருங்கள்!'

வழக்கப்படி அவர் கைபிடித்துக் குலுக்குவார் என்ற எண்ணத்தில், அவள் தன் கையை நீட்டினுள்; ஆனால் அவர் அதைப் பற்றிக் கொள்ளவில்லை. அவர் அவளைத் தொடர்ந்து வீட்டுக்குள் சென்றார்.

ஆனால் அவரை எங்கேயிருக்கச் சொல்வது? அந்த வீட்டில் இடம் சுருக்கம். ஒரே சிறு அறைதான் இருந்தது. முதலில் அதை அவள் தனக்கென்று வைத்துக்கொண்டிருந்தாள். பிறகு மாஷா அதற்கு வந்துவிட்டாள். இப்பொழுதும் மாஷாதான் அதில் இருந்து குழந்தைக்குத் தொட்டிலை ஆட்டிக்கொண்டிருந்தாள்.

சமையலறையிலிருந்த ஒரு பெஞ்சைச் சுட்டிக் காட்டி, 'ஒரு நிமிஷம் இங்கே உட்கார்ந்திருங்கள்!' என்று சொன்னுள் பிரஸ்கோவியா.

செர்கியஸ் உடனே பெஞ்சில் அமர்ந்துகொண்டு, தம் முதுகிலிருந்த மூட்டையைக் கீழே இறக்கி வைத்தார். மூட்டையை மாட்டியிருந்த இரண்டு நாடாக்களையும் அவிழ்ப்பதும் மாட்டுவதும் பல நாட்களாக அவருக்குப் பழகிப் போயிருந்ததால், அவருடைய கைகள் தாமாகவே அந்த வேலையைச் செய்துவந்தன.

'தெய்வமே, தெய்வமே! இவ்வளவு தாழ்மையான நிலைக்கு இறங்கி வந்துவிட்டீர்களே! எவ்வளவு உன்னதமான நிலையில் இருந்தீர்கள்—திடீரென்று...'

னகை மட்டும் புரிந்தார்.

'மாஷா, இது யார் தெரியுமா?'

பிரஸ்கோவியா தன் மகளிடம் இரகசியமாக அவர் யாரென்பதைச் சொன்னாள். அவர்கள் இருவரும் சேர்ந்து மாஷாவின் மெத்தை, படுக்கை முதலியவைகளை அப்புறப்படுத்தினர். குழந்தையையும் தொட்டிலையும் வேறிடத்திற்கு மாற்றினர். செர்கியஸுக்காக அறை காலியாகிவிட்டது.

பிரஸ்கோவியா அவரை அந்த அறைக்கு அழைத்து வந்தாள்.

'நீங்கள் இங்கே ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். அறை மிகவும் சிறியதுதான், மன்னியுங்கள். நான் அவசரமாக வெளியே போக வேண்டி யிருக்கிறது!'

'எங்கே?'

'பாடம் சொல்லிக் கொடுப்பதற்கு. உங்களிடம் சொல்லவே வெட்கமா யிருக்கிறது. நான் சங்கீதம் சொல்லி வைக்கிறேன்!'

'சங்கீதமா? மிகவும் நல்லது. பிரஸ்கோவியா, மிக முக்கியமான ஒரு விஷயமாக நான் இங்கு வந்திருக்கிறேன். உன்னிடம் சிறிது நேரம் பேச வேண்டும். எப்பொழுது சௌகரியப்படும்?'

'எனக்கும் மகிழ்ச்சிதான். இன்று மாலை பேசிக் கொள்ளலாமா?'

'சரி. இன்னொரு விஷயம். ஜனங்களிடம் நான் யாரென்று சொல்ல வேண்டாம். உன்னிடம் மட்டும் நான் பூரண நம்பிக்கை வைக்க முடியும். நான் எங்கே போயிருக்கிறேன் என்பது யாருக்கும் தெரியாது. ஆகையால் இந்த விஷயம் மிகவும் முக்கியமானது.'

'ஓகோ! நான் என் மகளிடம் சொல்லிவிட்டேனே!'

'அப்படியானல், அவள் அதைப்பற்றி வெளியே பேச வேண்டாமென்று சொல்லிவை!'

செர்கியஸ், பூட்ஸுகளைக் கழற்றிவிட்டு, கீழே சாய்ந்தவுடன் உறங்கிவிட்டார். முந்திய நாள் இரவில் அவர் தூங்கவில்லை. அன்று இருபத்தைந்து மைலுக்கு மேல் நடந்தும் வந்ததால், அவர் களைப்படைந்திருந்தார்.

* * *

பிரஸ்கோவியா திரும்பி வந்த சமயம் செர்கியஸ் விழித்திருந்தார். அவள் வரவை எதிர்பார்த்து அவர் அந்தச் சிறு அறையில் காத்திருந்தார். சாப்பாட்டிற்காகக்கூட அவர் வெளியே வரவில்லை. லுகிரியா கொண்டுவந்து கொடுத்த கொஞ்சம் கூழையும், 'சூப்' பையும் மட்டும் அவர் அருந்தியிருந்தார்.

'நீ சொல்லியதற்கு முன்னதாகவே வந்துவிட்டாய் போலிருக்கிறது! நமது பேச்சைத் தொடங்கலாமா?' என்று அவர் கேட்டார்.

'எனக்கு இத்தகைய மகிழ்ச்சி கிடைத்ததே பெரும் பாக்கியம். உங்களைப் போன்ற ஒருவர் என் வீட்டுக்கு வருவது சாதாரண விஷயமா? நான் என்ன புண்ணியம் செய்தேனே, எனக்கு இந்தப் பேறு கிடைத்திருக்கிறது! ஆகையால் இரண்டொரு பாடங்களைக் குறைத்துக்கொண்டு, அவசரமாக வந்துவிட்டேன். பின்னல் அவைகளைச் சேர்த்துச் சொல்லிக்கொடுத்துவிடுவேன்...நானே உங்களை வந்து பார்க்க வேண்டும் என்று எண்ணித் திட்டம் போட்டுக்கொண்டிருந்தேன். உங்களுக்குக் கடிதமும் எழுதியிருந்தேன். ஆனல்

தாங்களே வந்துவிட்டீர்கள். எனக்கு மிகவும் மகிழ்ச்சியா யிருக்கிறது!'

'பாஷெங்கா! இப்பொழுது நான் உன்னிடம் சொல்லப் போவதை எனது மரணத் தருவாயில் நான் ஆண்டவர் முன்னிலையில் தெரிவிக்கும் பாவ அறிக்கை யாக நீ கருத வேண்டும். பாஷெங்கா! நான் புனிதமான வன் அல்லன், சாதாரண மனிதனுகக்கூட நானில்லை. நான் ஒரு பாவி—இழிவான, தீய, ஒழுக்கம் தவறிய, அகங்காரமுள்ள பாவி...எல்லா மனிதர்களையும்விட நான் தாழ்ந்தவன் என்றில்லா விட்டாலும், தாழ்ந்தவர்களிலே நான் கடைப்பட்டவன்.'

பாஷெங்கா முதலில் கண்களை நன்ருகத் திறந்து கொண்டு, அவரையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந் தாள். அவர் சொன்னதை அவள் எப்படி நம்பமுடியும்? பின்னல், அவள் நம்பத் தொடங்கியவுடன், அவள் தன் கையால் அவருடைய கையைப் பிடித்துக்கொண்டு, சோகச் சிரிப்புடன், 'ஸ்டீபன், நீங்கள் மிகைப்படுத்திப் பேசுகிறீர்கள் போலிருக்கிறது—அப்படி யெல்லாம் இராது!' என்று சொன்ஞள்.

'இல்லை, பாஷெங்கா! நான் தெய்வ நிந்தனை செய் தவன், ஏமாற்றுக்காரன்.'

'அட ஆண்டவனே! இதெல்லாம் உண்மையா யிருக்க முடியுமா?' என்று பிரஸ்கோவியா முனகி ஞள்.

'ஆனல் வாழ்க்கையை வாழ்ந்தாக வேண்டும். அறிய வேண்டியதை யெல்லாம் அறிந்துவிட்டதாக எண்ணிக்கொண்டு, மற்றவர்கள் எப்படி வாழவேண்டு மென்று புத்தி சொல்லிக்கொண்டிருந்த நான், எதை

யும் அறிந்தவனல்லன். உன்னிடம் கற்றுக்கொள்ளவே இங்கு வந்திருக்கிறேன்.'

'ஸ்டீபன், நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? என்னை ஏளனம் செய்கிறீர்கள் போலிருக்கிறது. ஜனங்கள் என்னை ஏன் எப்பொழுதும் பரிகாசம் செய்கிருர்கள்?'

'நீ வேண்டுமாளுல் நான் பரிகாசம் செய்வதாகச் சொல்லிக் கொள். ஆனுல் நீ எப்படி வாழ்கிருய் என்பதை மட்டும் எனக்குச் சொல்லு; உன் வாழ்க்கையை இதுவரை எப்படிக் கழித்திருக்கிருய்?'

'நாளு? நான் வாழ்க்கையை ஆகக் கழிவான தீய முறையில் கழித்திருக்கிறேன். இப்பொழுது ஆண்டவர் என்னைத் தண்டித்து வருகிருர். அது சரிதான், வாழ்க்கை மிகவும் மோசம், மிகவும் மோசம்...'

'உன் திருமணம் எப்படி நடந்தது? மணமான பின்பு, நீ எப்படி வாழ்ந்து வந்தாய்?'

'அவை யெல்லாமுமே மோசம். நான் எப்படி மணம் செய்துகொண்டேன்? மிகவும் தவருன முறையிலே நான் ஒருவரைக் காதலித்தேன். தந்தை அதை ஆட்சேபித்தார். யார் பேச்சையும் நான் கேட்கத் தயாராயில்லை. ஆகவே நினைத்தபடி கலியாணம் நிறைவேறிற்று. திருமணமான பின், நான் கணவருக்கு உதவி செய்வதற்குப் பதிலாக, பொருமையால், அவரைத் துன்புறுத்தி வந்தேன். பொருமையை மட்டும் என்ளுல் அடக்கிக்கொள்ள முடியவில்லை.'

'அவர் குடிகாரர் என்று நான் கேள்விப்பட்டேன்.'

'ஆம். ஆனுல், கொதிப்பேறியிருந்த அவர் நரம்புகளுக்குச் சாந்தியுண்டாகும்படி நடந்துகொள்ள எனக்குத் தெரியவில்லை. அவரை ஓயாது நிந்தித்துக்

கொண்டேயிருந்தேன். அதுவும் ஒரு நோய்தான். அவரால் தாங்க முடியவில்லை. என் பொறுமையை அவர் அறிய முடியாமல் மறைத்துக் கொண்டிருந்தேன். கடைசியில் எங்களுக்குள் பயங்கரமான அடிபிடியும், பூசல்களும் ஏற்பட்டன.'

இந்தப் பழைய விஷயங்களை நினைத்தபொழுது அவள் வேதனை நிறைந்த பார்வையுடன் ஸ்டீபனைக் கவனித்தாள்.

பாஷெங்காவின் கணவர் அவளை அடித்து வந்த தாகத் தாம் முன்பு கேள்விப்பட்டது அவருடைய நினைவுக்கு வந்தது. அவளுடைய மெலிந்திருந்த கழுத்தையும், செவிகளுக்குப் பின்னால் நரம்புகள் புடைத்திருந்ததையும், மெல்லிய தலையை அவள் வாரி முடித்திருந்ததையும், உரோமம் பாதி நரைத்தும், பாதி கபில நிறமாயும் இருந்ததையும் அவர் கண்டு, பழைய நிகழ்ச்சிகள் தம் கண் முன்பு நடப்பவை போலப் பார்த்துக் கொண்டார்.

'பிறகு நான் இரண்டு குழந்தைகளுடன், வாழ வசதி யொன்றும் இல்லாமல், தனியே விடப்பட்டேன்.'

'உனக்கு நிலம் இருந்ததல்லவா ?'

'வசியா உயிருடன் இருக்கும்பொழுதே, அதையெல்லாம் விற்றுத் தொலைத்து விட்டோம்—பணமும் காலியாகி விட்டது. எப்படியாவது நாங்கள் வாழ வேண்டியிருந்தது, ஆனால் எனக்கோ ஒரு தொழிலும் தெரியாது. மற்றக் கனவான்கள் வீட்டுப் பெண்களைப் போலவே, நானும் ஒரு வழியுமில்லாமல் இருந்தேன். அதிலும் என் நிலைமை மிகவும் மோசமாயிருந்தது. கடைசியாக மிச்சமிருந்தவைகளைக் கொண்டு நாங்கள்

எப்படியோ வாழ்ந்தோம். குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பினேன், நானும் கொஞ்சம் கற்றுக்கொண்டேன். பிறகு மிட்டியாவுக்கு நோய் கண்டது—அதாவது அவன் பள்ளியில் சேர்ந்த நாலாவது வருடத்தில்—ஆண்டவர் அவனை என்னிடமிருந்து பறித்துக்கொண் டார். மாஷா வனியனைக் காதலித்தாள். அவன்தான் என் மருமகன். அவன் நல்லவன்தான், ஆனால் சோக மாகவே யிருக்கிறான். அவனுக்கு உடம்பும் சரியா யில்லை.'

'அம்மா!' என்று மகளின் குரல் அங்கே ஒலித்தது; 'குழந்தையை எடுத்துக் கொண்டு போ! நானே எல்லா வேலைகளும் பார்க்க முடியவில்லை!'

பிரஸ்கோவியா எழுந்திருந்து வெளியே சென்று இரண்டு வயதுப் பையனைக் கைகளிலே தூக்கிவந்தாள். குழந்தை திமிறிக்கொண்டும், அவள் தலையில் கட்டி யிருந்த துணியைப் பிடித்து இழுத்துக் கொண்டும் இருந்தது.

'நான் எங்கே நிறுத்தியிருந்தேன்? ஆமாம்.... வனியனுக்கு இங்கே ஒரு வேலை கிடைத்தது, நல்ல வேலை, மேலதிகாரியும் மிகவும் நல்லவர். ஆனால் அவனால் மேற்கொண்டு போக முடியவில்லை. அவன் வேலையை விட நேர்ந்தது.'

'அவனுக்கு என்ன நோய்?'

'நரம்புத் தளர்ச்சி. அது ஒரு பயங்கரமான வியாதி தான். அதைப் பற்றி வைத்தியர்களைக் கலந்து பேசி னோம். அவன் வெளியே எங்காவது போய் வர வேண்டும், அதற்கு வேண்டிய பணம் எங்களிடமில்லை. ஆனால் எப்படியும் அவனை அனுப்பலாம் என்றே நான்

நம்பிக்கொண்டிருக்கிறேன். அவனுக்கு உடலில் வேறு வலியோ, வேதனையோ எதுவுமில்லை. இந்த நரம்புத் தளர்ச்சி மட்டும்.......'

நோயாளி நலிந்து ஒடுங்கிய குரலில் 'லுகிரியா?' என்று கூப்பிடுவது கேட்டது. 'அவளை எங்கே யாவது அனுப்பி விடுகிறார்கள். எப்பொழுது வேண் டுமோ, அப்பொழுது இருப்பதில்லை. அம்மா!'

'இதோ வருகிறேன்!' என்று சொல்லி, பிரஸ்கோ வியா தன் பேச்சை மறுபடி நிறுத்திக் கொண்டாள். 'அவன் இன்னும் சாப்பிடவில்லை. அவன் நம்முடன் உட்கார்ந்து உண்ணவும் முடியாது' என்றாள் அவள்.

அவள் அறையை விட்டு வெளியேறினாள். வீட்டில் அவள் அங்குமிங்கும் நடமாடிக் கொண்டிருந்த காலோசை கேட்டுக்கொண்டே யிருந்தது. பிறகு அவள், தன் மெல்லிய கைகளைத் துடைத்துக்கொண்டு, உள் அறைக்குள் வந்தாள்.

'அவ்வளவுதான், எங்கள் வாழ்க்கை ஏதோ நடந்து கொண்டிருக்கிறது. எப்பொழுதும் குறைதான், எப்பொழுதும் அதிருப்திதான். ஆண்டவர் கிருபை யால் குழந்தைகள் எல்லோரும் நன்றாகவேயிருக்கி றார்கள். வாழ்க்கை ஓரளவு தாங்கக் கூடியதாகவே இருக்கிறது. ஆனால் என்னைப் பற்றியே பேசிக்கொண் டிருப்பதில் என்ன பயன்?'

'எதைக் கொண்டு நீங்கள் வாழ்க்கை நடத்து கிறீர்கள்?'

'நான் கொஞ்சம் சம்பாதிக்கிறேன். சங்கீதம் என்றால், எனக்கு முன்பு உற்சாகமே இராது. ஆனால் இப்பொழுது அதுதான் எனக்கு உதவியாயிருக்கிறது!'

இதைச் சொல்லும்பொழுது அவளுடைய கை விரல்களைப் பக்கத்திலிருந்த 'பீரோ'வின்மேல் வைத்துக் கொண்டு, அவள் 'ஹார்மோனியம்' வாசிப்பது போல அவைகளை அசைத்துக் கொண்டிருந்தாள்.

'இசை கற்பிப்பதற்கு உனக்கு என்ன கொடுக்கிருர்கள்?'

'ஒரு பாடத்திற்கு ஒரு ரூபிள், அல்லது ஐம்பது காசு. சிலர் முப்பது காசும் கொடுக்கின்றனர். ஆனல் எல்லோரும் என்னிடம் பிரியமா யிருக்கின்றனர்.'

'சரி, உன்னிடம் படிக்கிறவர்கள் முன்னேறி வருகிருர்களா?' என்று அவர், சற்றே புன்னகை செய்து கொண்டு, கேட்டார்.

அவர் உண்மையிலேயே இதை அறிய விரும்பிளுரா என்பது பிரஸ்கோவியாவுக்குச் சந்தேகமா யிருந்தது. ஏனென்ருல் கேள்வி அவ்வளவு வேடிக்கை யாய் இருந்தது. அவள் அவருடைய கண்களை உற்றுப் பார்த்தாள்.

'ஆம், அவர்கள் முன்னேற்றம் அடைந்திருக்கிருர்கள். அவர்களில் ஓர் அருமையான சிறு பெண் இருக்கிருள்—கசாப்புக் கடைக்காரரின் மகள். மிகவும் நல்ல பெண், அன்பு நிறைந்தவள்....எனக்குத் திறமை யிருந்தால், என் தகப்பனருக்குத் தெரிந்த நண்பர்களைக் கொண்டு வனியனுக்கு ஒரு வேலை வாங்கிக் கொடுத்திருப்பேன். எனக்கும் திறமையில்லை, அவர்களையும் இந்தக் கதியில் வைத்துக் கொண்டிருக்கிறேன்.'

ஸ்டீபன் தலையைக் கவிழ்ந்து கொண்டே, 'அப்படியா ? சரிதான்!' என்று முனகிக் கொண்டிருந்தார்.

பிறகு 'சரி, பாஷெங்கா, ஆலய சம்பந்தமாக—நீ கோயிலுக்குச் சென்று தொழுவதுண்டா?'

'ஆ, அதைப் பற்றி யெல்லாம் பேசாமலிருத்தலே நல்லது. நான் அவ்விஷயத்தில் மிகவும் அலட்சியம் செய்து விட்டேன். ஏதோ "லெண்ட்" விரத நாளில் உபவாசம் இருப்போம்; கோயிலுக்குப் போவோம்—அவ்வளவுதான். மாதக் கணக்காக நான் மாதா கோயிலுக்குச் செல்வதில்லை. ஆனால் குழந்தைகளை அனுப்பி வருகிறேன்.'

'நீ ஏன் போவதில்லை?'

'அதுவா? உங்களிடம் உள்ளதைச் சொல்ல வேண்டும்,'—அவள் முகம் வெட்கத்தால் சிவந்தது—'என்னால் என் மகளுக்கும், குழந்தைகளுக்கும் கேவலம் வரக்கூடாது என்பது என் எண்ணம். என் உடைகள் ஆபாசமாக இருந்ததால், நான் போகவில்லை. புது உடைகளும் என்னிடம் இல்லை. இத்துடன் எனது சோம்பலும் சேர்ந்து கொண்டது.'

'அப்படியானால் நீ வீட்டிலாவது தொழுவ துண்டா?'

'ஆம், ஆனால் அது சரியான பிரார்த்தனையாகுமா? அது இயந்திரம் வேலை செய்வது போலத்தான், அதில் உயிரில்லை, உண்மையான உணர்ச்சியில்லை. அதனால் என்னுடைய கெட்ட குணங்கள்தான் தெளிவாகத் தெரி கின்றன.'

'சரி, சரி, எனக்குப் புரிகிறது,' என்று ஸ்டீபன் கூறினார்; அது அவள் செய்வதே சரியென்று ஒப்புக் கொள்வது போலிருந்தது.

மருமகன் மறுபடி குரல் கொடுத்தான்.

'வருகிறேன், இதோ வருகிறேன்' என்று சொல்லி, தடைகளைச் சரிப்படுத்திக் கொண்டு, அவள் மீண்டும் அறையை விட்டு வெளியே சென்றாள்.

இத்தத் தடவை அவள் நீண்ட நேரமாய்த் திரும்பி வரவில்லை. கடைசியாக அவள் வரும்பொழுது, ஸ்டீபன் முன்போல் தம் முழங்கைகளைக் கால்களின் மேல் வைத்துக் கொண்டு, முன்பக்கமாகக் குனிந்து அமர்ந்திருந்தார். ஆனால் அவருடைய மூட்டை முதுகில் தொங்க விடப்பட்டிருந்தது.

அவள் உள்ளே வரும்பொழுது கையில் ஒரு சிறு தகர விளக்கு ஒன்றை வைத்திருந்தாள். அவர் நிமிர்ந்து, அவள் கண்களை ஒருமுறை பார்த்துவிட்டு, நெடு மூச்சு விட்டார்.

அவள், சிறிது கூச்சத்துடன், 'நீங்கள் யார் என்பதை நான் அவர்களிடம் சொல்லவில்லை. பெரிய குடும்பத்தைச் சேர்ந்த ஒரு யாத்திரிகர், முன்பு எனக்குத் தெரிந்தவர் என்று மட்டும் சொல்லியிருக்கிறேன்... சரி, நேரமாகிறது, உள்ளே வந்து தேநீர் பருகுங்கள். வாருங்கள்!' என்று கூறி அழைத்தாள்.

'வேண்டியதில்லை, அம்மா!'

'அப்படியானால் உங்களுக்கு இங்கேயே கொண்டு வருகிறேன்!'

'இல்லை, எனக்கு அவசியமில்லை. பாஷெங்கா, கடவுள் உன்னைக் காப்பாராக! நான் போகிறேன். உனக்கு என்னிடம் அன்பிருந்தால், யாரிடமும் என்னைக் கண்டதாகச் சொல்லிவிடாதே. எங்கும் நிறைந்த ஆண்டவர் பெயரால், உனக்கு ஆணையிட்டுச் சொல்லுகிறேன்—இது எவருக்கும் தெரிய வேண்டாம். உனக்கு

மிகவும் நன்றி. நான் கீழே விழுந்து உன்னை வணங்கியிருப்பேன்.—ஆனால் அதனால் உன் மனம் சங்கடப்படுமே என்றுதான் அப்படிச் செய்யவில்லை. வந்தனம், கிறிஸ்துவின் பெயரால் வேண்டுகிறேன், என்னை மன்னித்துவிடு!'

'எனக்கு உங்கள் ஆசியை அளியுங்கள்!'

'ஆண்டவர் உனக்குக் கிருபை செய்வார். கிறிஸ்துவின் பெயரால், என்னை மன்னிப்பாயாக!'

அப்படியே அவர் புறப்பட்டுப் போயிருப்பார், ஆனால் அவள் அவரைத் தடுத்து நிறுத்தி, ரொட்டி, வெண்ணெய், இரண்டாம் முறை சுட்ட ரொட்டித் துண்டுகள் ஆகியவைகளைக் கொண்டு வந்து கொடுத்தாள். அவற்றை அவர் வாங்கி வைத்துக் கொண்டு, புறப்பட்டுச் சென்றார்.

வெளியே இருளாயிருந்தது. அவர் இரண்டு வீடுகளே தாண்டியிருப்பார். அப்புறம் அவள் கண்களுக்கு அவர் தென்படவில்லை. ஆனால் அவர் அந்தப் பக்கம் போகிறார் என்பதை நாய் குரைப்பதைக் கொண்டு அவள் யூகித்துக் கொண்டாள்.

'ஆகவே இதுதான் நான் கண்ட கனவின் பொருள் போலிருக்கிறது. நான் எவ்வாறு இருந்திருக்க வேண்டுமோ அவ்வாறு இல்லாமற் போய்விட்டேன்; ஆனால் பாஷெங்கா நான் இருக்க வேண்டிய நிலையில் இருக்கிறாள். நான் ஆண்டவருக்காக வாழ்வது போல் பாசாங்கு செய்துகொண்டு, மனிதனுக்காக வாழ்ந்தேன்; ஆனால் அவள் மனிதனுக்காக வாழ்வதாகக் கற்பனை செய்துகொண்டு, ஆண்டவருக்காகவே வாழ்கிறாள். மனிதன் போற்ற வேண்டும் என்பதற்காக

இதுவரை நான் பலருக்கு உதவி செய்து வந்ததைவிட, பிரதி பலன் கருதாத ஒரு நல்ல செயல் செய்திருந் தாலும், அல்லது ஒரு கோப்பைத் தண்ணீர் அளித் திருந்தாலும் அவை மேலானவை. ஆனால் ஆண்ட வருக்குத் தொண்டு செய்ய வேண்டுமென்று நான் விரும்பியதில் துளிகூட உண்மையில்லையா? இருந்தது; ஆனால் மனிதர்களிடையே பெருமை பெற வேண்டும் என்ற ஆசை அதன்மேல் வளர்ந்து, அதை மறைத்து விட்டது—அந்த உண்மையான நோக்கத்தின் தூய்மை கெட்டுவிட்டது. மக்களிடையே புகழ் பெற வேண்டு மென்று என்னைப்போல் வாழ்ந்த ஒருவனுக்கு, ஆண்ட வரே கிடையாது. ஆகையால் அவரைத் தேடிக் கொண்டு நான் போகிறேன், யாத்திரை செய்து கொண்டே யிருக்கிறேன்.'

இவ்வாறு சிந்தனை செய்து கொண்டே அவர் வழி நடந்தார். கிராமம் கிராமமாய்ச் சுற்றிக் கொண்டு, அவர் எப்படிப் பாஷெங்காவை நாடி வந்தாரோ, அதே போல, ஆடவர் பெண்டிர் ஆகிய யாத்திரிகர்களுடன் சேர்ந்தும், தனித்தும், பிரயாணம் செய்துகொண் டிருந்தார். வழியெங்கும், கிறிஸ்துவின் பெயரால், கிடைத்த பிச்சையைப் பெற்றுக் கொண்டு, கிடைத்த இடத்தில் படுத்துக் கொண்டு, அவர் நடந்துகொண்டே யிருந்தார். சில சமயங்களில் கோபம் கொண்ட ஸ்திரீ யாராவது அவரை ஏசுவதும் உண்டு; குடி வெறியி லுள்ள குடியானவன் எவனாவது நிந்திப்பதும் உண்டு. ஆனால் பெரும்பாலான வீடுகளில் அவர் உண்பதற்கும் பருகுவதற்கும் தேவையானவை கிடைத்து வந்ததுடன், வழிப் பயணத்திற்காக எடுத்துச் செல்லவும் ரொட்டி

முதலியவைகளைக் கொடுத்து மக்கள் உபசரித்தார்கள். அவர் பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர் என்பதை அவருடைய தோற்றத்தால் அறிந்து சிலர் அவருக்கு அதிகமாக உதவிகள் செய்தனர். சிலர், பணக்காரர் களில் ஒருவர் இப்படிப் பிச்சையெடுப்பதில் இறங்கி விட்டதைக் கண்டு மகிழ்ச்சியடைந்தனர். ஆயினும் அவருடைய சாந்த குணமும், இன் சொல்லும் எல்லோ ரையும் வென்று விட்டன.

வழியிலே அவர் தங்கும் வீடுகளில் கிறிஸ்தவ வேதப் புத்தகம் இருந்தால், அவர் அதை எடுத்து, அதில் சில பகுதிகளை உரக்கப் படிப்பார். அந்த விஷ யங்கள் முன்பு தெரிந்தவைகளாக இருந்த போதிலும், எப்பொழுதும், எல்லா இடங்களிலும், மக்கள் அவைகளை அப்பொழுதுதான் புதியதாய்க் கேட்பது போன்ற ஆர்வத்துடன் அநுபவிப்பார்கள். அவை எப்பொழு துமே புதியவைகளாயும், உள்ளங்களை உருக்குபவை களாயும் இருந்தன.

அவர் ஜனங்களுக்கு ஏதாவது ஆலோசனை சொன் ஞலும், எழுதப் படிக்கத் தெரியாதவர்களுக்காகக் கடிதங் கள், பத்திரங்கள் எழுதிக் கொடுத்தாலும், சண்டை போடுகிறவர்களைச் சமாதானப்படுத்தி வைத்தாலும், அவர் செய்யும் உதவிகளுக்காக அவர்கள் நன்றி கூறு முன்ஞல், அவர் வேறிடத்திற்குப் போய்விடுவார். இவ்வாறு கொஞ்சம் கொஞ்சமாக அவர் தாம் தேடிக் கொண்டிருந்த ஆண்டவரைக் கண்டு வந்தார்.

ஒருநாள் அவர் சாலை வழியாக நடந்துகொண் டிருக்கையில், அவருடன் இரண்டு கிழவிகளும், ஓய்வு பெற்ற போர்வீரன் ஒருவனும் சென்று கொண்டிருந்

தனர். அப்பொழுது அந்தப் பக்கமாக ஒரு குதிரை வண்டி வந்தது. அதில் ஒரு கனவானும், சீமாட்டியும் அமர்ந்திருந்தனர். கனவான் **பிரான்ஸ்** தேசத்தைச் சேர்ந்தவர். ரஷ்யாவைச் சுற்றிப்பார்க்க வந்திருந்தார். வண்டியின் இரு பக்கங்களிலும் வேறு ஒரு கனவானும் ஒரு பெண்ணும் இரண்டு குதிரைகளில் வந்து கொண்டிருந்தனர். அவர்கள் வண்டியிலிருந்த சீமாட்டியின் கணவரும், மகளும். அவர்கள் சாலையிலே நடந்து சென்ற யாத்திரிகர்களை நிற்கும்படி கேட்டுக் கொண்டனர். வண்டியிலிருந்த பிரெஞ்சுக்காரருக்கு, இவர்கள்தாம் யாத்திரிகர்கள்!' என்று காட்டுவதற் காகவே அவர்கள் ஸ்டீபன் முதலிய நால்வரையும் நிறுத்தி வைத்தனர். ரஷ்ய மக்கள் தொன்று தொட்டே ஊர் ஊராகச் சுற்றி யாத்திரை செய்பவர்கள் என்பதை யும், மூட நம்பிக்கை கொண்டவர்கள் என்பதையும், ஒரே யிடத்திலிருந்து வேலை செய்வதைக் காட்டிலும் க்ஷேத்திரங்களைச் சுற்றி வருவதிலேயே நாட்டமுள்ளவர் கள் என்பதையும் வெளிநாட்டார் நேரில் பார்ப்பதற்கு அது ஒரு வாய்ப்பாயிற்று.

அவர்கள் எல்லோரும் பிரெஞ்சு மொழியில் பேசிக் கொண்டார்கள், அதனால் யாத்திரிகர்கள் அவர்கள் பேச் சைப் புரிந்துகொள்ள முடியாது என்பது அவர்கள் நினைப்பு.

'அவர்களுடைய யாத்திரை ஆண்டவருக்கு உகந் தது என்று அவர்கள் உறுதியாக நம்புகிறார்களா என்று கேளுங்கள்!' என்றார் பிரெஞ்சுக்காரர்.

அந்தக் கேள்வியைக் குதிரை மேலிருந்த கனவான் கேட்டார். அதற்குக் கிழவிகள் பதில் சொன்னார்கள்:

'கடவுளுக்குத்தான் அது தெரியும். எங்கள் பாதங்கள் க்ஷேத்திரங்களை நாடிச் செல்கின்றன. எங்கள் இதயங் களும் அப்படியே நாடிச் செல்வதாக இருக்கலாம்!'

போர்வீரனிடம் அந்தக் கேள்வி கேட்கப்பட்டது. அவன், 'நான் உலகில் தனிமையி லிருக்கிறேன்; எனக்குத் தங்குவதற்கென்று ஓர் இடம் கிடையாது!' என்று சொன்னான்.

ஸ்டீபனைப் பார்த்து, 'நீங்கள் யார்?' என்று கேட்கப் பெற்றது.

'ஆண்டவரின் ஊழியன்.'

'அவர் என்ன சொல்கிறார்? ஏன் பதில் சொல்ல வில்லை?' என்று கேட்டார் பிரெஞ்சுக்காரர்.

'அவர் ஆண்டவரின் ஊழியர் என்று சொல்கிறார்.'

பிரெஞ்சுக்காரர், அவர் ஒரு போதகரின் குமாரரா யிருப்பார் போலிருக்கிறது. தோற்றம் கம்பீரமா யிருக்கிறது. சில்லறை ஏதாவது இருக்கிறதா என்று பார்க்கிறேன்!' என்று சொல்லி, தமது சட்டைப் பையிலிருந்து கொஞ்சம் காசுகளை யெடுத்து, யாத்திரி கர்களில் ஒவ்வொருவருக்கும் இருபது காசுகள் வீதம் கொடுத்தார்.

கொடுக்கும் பொழுது, 'பணம் ஆலயங்களில் மெழுகுதிரிகள் வாங்கி வைப்பதற்காகக் கொடுக்க வில்லை, அவர்கள் தேநீர் வாங்கிக் குடிப்பதற்காக என்று சொல்லுங்கள்!' என்று அவர் கூறினார். அத்துடன் அவர் ஸ்டீபனைத் தோளில் தட்டிக் கொடுத்தார்.

ஸ்டீபனும், தமது தொப்பியைக் கழற்றிக் கையிலே வைத்துக்கொண்டு, அவருக்குத் தலை வணங்கி, 'கிறிஸ்து உங்களைக் காப்பாராக!' என்று கூறினார்.

இந்த நிகழ்ச்சி ஸ்டீபனுக்கு விசேட மகிழ்ச்சியளித்தது. மற்றவர்கள் தம்மைப் பற்றி என்ன நினைத்தாலும், அவருக்கு அக்கறையில்லை என்பது இதில் தெளிவாயிற்று. தமக்கு அளிக்கப்பெற்ற இருபது காசுகளையும் அவர் பணிவுடன் ஏற்றுக்கொண்டு, அவைகளைக் குருட்டுப் பிச்சைக்காரன் ஒருவனுக்குக் கொடுத்து விட்டார். ஒருவரிடம் வாங்கி, தேவையுள்ள மற்றொருவருக்கு உடனே அளித்தது மிக எளிதாகச் செய்யக் கூடிய தருமமாயிற்று. மனிதர்களுடைய அபிப்பிராயத்தைக் கவனிப்பதை அவர் எவ்வளவு குறைத்துக் கொண்டாரோ, அந்த அளவுக்கு அவர் தமது ஆண்டவரை உணர்ந்து கொள்ள முடிந்தது.

இவ்வாறு எட்டு மாதங்கள் கழிந்தன. ஒன்பதாவது மாதத்தில் ஒரு தாலூகாவின் தலைநகரின் வழியாகப் போகும் பொழுது, அதிகாரிகள் ஸ்டீபனைக் கண்டு சில கேள்விகள் கேட்டனர். முந்திய நாள் இரவில் அவரும் மற்ற யாத்திரிகர்களும், எங்கே தங்கியிருந்தனர் என்றும், அவரிடம் அங்கு வருவதற்கு அநுமதிச் சீட்டு இருந்ததா என்றும் கேட்கப்பட்டது. அவரிடம் அநுமதிச் சீட்டு இல்லை. அதனால் அவர் போலீஸ் நிலையத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார். அவர் பெயர் என்ன என்றும், அநுமதிச் சீட்டை அவர் என்ன செய்தார் என்றும் அங்கே கேட்கப்பட்டது. அவர் தாம் 'ஆண்டவரின் ஊழியன்' என்றும், தம்மிடம் சீட்டில்லை என்றும் தெரிவித்தார். அதன் பேரில் அவர் நாடோடி என்று வழக்குத் தொடரப்பட்டது. பின்னர் அவருக்குத் தண்டனை விதித்து, அவரை நாடு கடத்தி, சைபீரியாவுக்கு அனுப்பிவிட்டார்கள் அதிகாரிகள்.

சைபீரியாவில் அவர் செல்வம் மிகுந்த ஒரு குடியானவரின் பண்ணையில் சேர்ந்து கொண்டு, அங்கேயே இன்றுவரை வசித்து வருகிறார். அவர் அந்தக் குடியானவருடைய தோட்டத்தில் வேலை செய்கிறார்; கிராமக் குழந்தைகளுக்குக் கல்வி போதிக்கிறார்; நோயாளருக்குத் தம்மால் இயன்ற பணிவிடைகளும் செய்து வருகிறார்.